# பள்ளிக்கூடம் திறந்துவிட்டது...

பள்ளிக்கு குடிநீரை
சுகாதாரமாகக் கொண்டு செல்ல
உடனே வாங்கிடுவீர்
ஸ்ரீபெட் ஸ்கூல் வாட்டர்
பாட்டில்கள். கண்ணைக்கவரும்
வண்ணங்களில்,
நெஞ்சையள்ளும்
வடிவங்களில் எங்கும்
கிடைக்கின்றன !



**இலவசம்!**

ஒவ்வொரு ஸ்ரீபெட்
ஸ்கூல் வாட்டர்
பாட்டிலுடன்
ரப்பருடன் கூடிய
பென்சில் !

முந்துங்கள் !
இச்சலுகை 31.7.92 வரை
மட்டுமே

## ஸ்ரீபெட்

பாட்டில்கள் • ஜாடிகள்

சுகாதாரமானது.

உடையாதது.

உணவுத்தரம் கொண்டது.






ஸ்ரீபெட்
ஸ்ரீராம் நிறுவனத்தின்
தரமான தயாரிப்பு

விநியோகஸ்தர்கள்: ஸ்ரீராம் சேல்ஸ் இன்டர்நேஷனல்

AAA/SSI/9249

# கல்கி ஆகஸ்து 2 ஆண்டு மலர்

பொன் விழா நாவல் போட்டியில்

## முதல் பரிசு பெறும்

மகத்தான நாவல் ஆரம்பம்





## உங்கள் ஸ்கூட்டரை நேசியுங்கள்

ஸ்கூட்டர், மொபெட் அல்லது மோட்டார் சைக்கிள் வைத்திருக்கும் அல்லது வாங்கப் போகும் ஒவ்வொருவருக்கும் நிரந்தரப் பயன்தரும் இலவச இணைப்பு!

## இனி ஒரு சதி

## பத்மா ரவிசங்கர்

எழுதும் மர்மச் சித்திரத் தொடர்!



மற்றும் பல புதிய அம்சங்கள்

அதிக பக்கங்கள்; அதே விலை!

# பொய்யைக் கண்டுபிடிக்க ஒரு கருவி!



பாலிகிராஃப் கருவியுடன் இணைக்கப்பட்ட, ஒரு 'மாடல்' குற்றவாளியாக நடிக்க, சந்திரசேகர் கேள்விக் கணைகள் தொடுக்கிறார்!

ஹர்ஷத் மேத்தா விவகாரத்தில் சம்பந்தப்பட்டவர்களையெல்லாம் ''லைடிடக்டர்'' சோதனைக்கு உட்படுத்தினார்கள் என்று செய்தி. அது என்ன, பொய்யைக் கண்டு பிடிக்கும் கருவி? தடய அறிவியல் துறைத் தலைவர் பேராசிரியர் சந்திரசேகரனைக் கேட்டோம்.

'பாலிகிராப்' என்ற இயந்திரத்தைத் தான் பேச்சு வழக்கில் 'பொய்யைக் கண்டு பிடிக்கும் கருவி' என்று சொல்கிறார்கள்.

இந்தியாவிலேயே தயாரிக்கப்படும், இந்த பாலிகிராப் இயந்திரத்தின் விலை எழுபத்தையாயிரம் ரூபாய். இதனை ஹார்வர்டைச் சேர்ந்த வில்லியம் மார்ஸ்டன் என்பவர், 1917 - ல் கண்டு பிடித்தார்.

பொதுவாகத் திருட்டு மற்றும் கொலை கேஸ்களில், சந்தேகத்துக்கு உட்பட்ட நபர்களிடமிருந்து உண்மையை வரவழைப்பதற்குப் போலீஸார் எத்தகைய முறைகளைப் பயன்படுத்துவார்கள் என்பது தெரிந்தது தான். சில நாடுகளில் 'ட்ரூத் சீரம்' என்ற பெடாமி மயக்கம் அல்லது உறக்கத்தைத் தூண்டும் மருந்துகளைக் கொடுத்தும் உண்மையைக் கறக்க முயற்சி செய்வார்கள். இம்முறைகள் சம்பந்தப்பட்டவரை உடல் ரீதியாய் இம்சிப்பதாக இருப்பதால், மனித உரிமைக் கழகத்தினர் எதிர்ப்புத் தெரிவித்து வருகின்றனர்.

உடலுக்கு எந்தவிதத் துன்புறுத்தலுமில்லாமல், ஒரு நபர் பொய் சொல்லுகிறாரா, உண்மையைச் சொல்லுகிறாரா என்று கண்டறிய உதவுவதுதான் பாலிகிராப். விசாரணைக்கு உட்படுத்தப்படும் நபரின் மார்புப் பகுதியில் தளர்வில்லாமல் ஒரு பெல்ட் கட்டப்பட்டு, அது பாலிகிராப் கருவியுடன் இணைக்கப்படும். அதேபோல நாடித் துடிப்பு, ரத்த அழுத்தம் போன்றவற்றையும் இக்கருவியில் பதிவு செய்ய வழி உண்டு.

சந்தேகப் பேர்வழியிடம் இந்தக் கருவி பற்றிய எல்லா விவரங்களையும் விளக்கி விட்டுத்தான் ஒன்றன்பின் ஒன்றாய்க் கேள்விகள் கேட்பார்கள். கேள்விகள் மிக எளிமையாகவும், அவருடைய குணநலன்களை வெளிப்படுத்தும்விதத்திலும் அமைந்திருக்கும். ஒரு செட் கேள்விகளில் இடைச் செருகலாய், அவர் மீது சந்தேகப் படும் விஷயம் குறித்து ஒரு கேள்வி இடம் பெறும்.

உண்மையை மறைத்துப் பொய் சொல்லும் போது, அவருடைய இதயத் துடிப்பு, மூச்சு விடும் வேகம் முதலியவற்றில் மாற்றங்கள் நிகழும். உடம்பு லேசாய் வியர்க்கும். இந்த மாற்றங்கள் எல்லாம், இயந்திரத்தில் பதிவாகும். இதை வைத்துக் கொண்டு, எந்தத் தருணத்தில் அந்த நபர் உண்மையை மறைக்கும் முயற்சியில் ஈடுபட்டார் என்பதை நிர்ணயிக்கலாம். அப்போது கேட்கப்பட்ட கேள்வி எது என்பதும் நமக்குத் தெரியுமாதலால் நாம் சரியான முடிவுகளுக்கு வர இயலும்.

ஆனால் ஒன்று. நம் நாட்டுச் சட்டப்படி, முதல் கட்ட விசாரணைகளின் போது பயன்படுத்தப்படும் இந்தக் கருவியை ஒரு சாட்சியாய் எடுத்துக் கொண்டு, குற்றம்சாட்டப்பட்டவருக்குத் தண்டனை வழங்கி விட முடியாது. வேறு சாட்சியங்கள், நிரூபணங்கள் தேவை. இது விசாரணைக்கு மட்டுமே உதவும். மேல் நாடுகளிலும் இப்படித்தான். ஆனால் மேல் நாடுகளில், குற்றம்சாட்டப்பட்டவர், 'லை டிடக்டர்' கருவி பரிசோதனைக்குத் தன்னை உட்படுத்திக் கொண்டு, தான் நிரபராதி என்று கோர்ட்டில் நிரூபித்து, விடுதலை பெற சட்டப்படி வழி உண்டு.

அமெரிக்காவில் உயர் பதவிகளுக்கு நியமிக்கப்படுபவர்களைப் பாலிகிராப் கருவி சோதனைகளுக்கு உட்படுத்தி, அந்த நபர் எந்த அளவுக்கு நாணயமானவர், நம்பிக்கைக்குரியவர் என்று நிர்மானித்துப் பின்னர் நியமன உத்தரவு வழங்குகிறார்கள்.

ஒரு கொசுறு நியூஸ் : ராஜீவ் காந்தி கொலை வழக்கில் குற்றம்சாட்டப்பட்டுள்ளவர்களில் பலரும் இந்த இயந்திரத்தில் சோதனைக்கு உட்படுத்தப்பட்டவர்களே!

- எஸ். சந்திரமௌலி

# அம்மா கோட்டைக்குப் போறாங்க!

கற்பனை: மௌலஷ்மி
கார்ட்டூன்: செல்வம்
















● விழா மேடை

# காவிரிப்படுகையில் கறுப்புத் தங்கம்!

"கர்நாடகத்துடன் நடத்தும் போராட்டங்களில் தமிழகம் வெற்றி பெற்றுக் காவிரியில் தண்ணீர் தாராளமாக வருவதாக வைத்துக் கொண்டாலும் கடைக்கோடியான எங்கள் கிழக்குத் தஞ்சைப் பகுதிக்குத் தண்ணீர் வரத்து சரியாக இருக்காது. இதனால் சமீப காலங்களில் விவசாயத் தொழிலில் இந்தப் பகுதி மக்களுக்கு ஈடுபாடு குறைந்து வருகிறது. மாற்றுத் தொழிலாக என்ன செய்வது என்று விவசாய மக்கள் யோசித்துக் கொண்டிருந்த போதுதான், இந்தப் பகுதியில் ஏராளமான எண்ணெய் வளம் இருக்கும் செய்தி மகிழ்ச்சியைக் கொடுத்தது. உடனடியாக எங்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்காவிட்டாலும், எதிர்காலத்தில் எங்கள் வாரிசுகளுக்கு, வளமான வாழ்வு அமையக்கூடும்'' என்றார் நன்னிலம் தாலுக்காவைச் சேர்ந்த குணசேகரன்.

வடக்கே புதுவையிலிருந்து தெற்கே குமரி முனை வரை பரவியிருக்கும் காவிரிப் படுகையில் (Cauvery Basin) கடலிலும் நிலப்பாங்கான பகுதிகளிலும் 54 கோடி டன் கச்சா எண்ணெய் கிடைப்பதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பதாக ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன. ஏற்கெனவே தோண்டப்பட்ட எண்ணெய்க் கிணறுகள் இதனை உறுதி செய்கின்றன. நாகையைச் சுற்றியுள்ள நரிமணம், கோவில் கலப்பை, நன்னிலம், அடியக்கமங்கலம் ஆகிய இடங்களில் எண்ணெய்க் கிணறுகள் செயல்பட ஆரம்பித்து விட்டன. இது தவிர, பெருவழுந்தான், கமலாபுரம், குமராட்சி போன்ற இடங்களிலும் சோதனைகள் நடத்து வருகின்றன.

இதுநாள் வரை இங்கே எடுக்கப்பட்ட கச்சா எண்ணெய் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டு சுத்திகரிக்கப்பட்டது. இதனால் பிரயாணச் செலவு தவிர, கால விரயமும் ஏற்படுகிறது. இதைத் தவிர்க்கும் பொருட்டு, காவிரிப் படுகையிலேயே பனங்குடி என்ற கிராமத்தில் ஆண்டிற்கு ஐந்து லட்சம் டன் கச்சா எண்ணெய்ச் சுத்திகரிக்கும் தொழிற்சாலை ஒன்றை சென்னை எண்ணெய் சுத்திகரிப்பு நிறுவனம் துவங்க இருக்கிறது. இதற்கான அடிக்கல்லைச் சமீபத்தில் ஜனாதிபதி வேங்கடராமன் நாட்டினார்.

சுமார் 115 கோடி ரூபாயில் உருவாக இருக்கும் இந்த தொழிற்சாலையில், கச்சா எண்ணெயிலிருந்து சமையல் எரிவாயு, நாப்தா, மண்ணெண்ணெய், டீசல் போன்றவை பிரித்தெடுக்கப்படும். தவிர, எண்

ணெய்க் கிணறுகளிலிருந்து தற்போது வீணாக வெளியேறிக் கொண்டிருக்கும் இயற்கை வாயுவிலிருந்து சமையல் வாயுவைப் (LPG) பிரித்தெடுக்கும் ஒரு பிரிவும், இந்தத் தொழிற்சாலையில் அமையவிருக்கிறது. 1993ம் ஆண்டில் தொழிற்சாலை செயல்படத் துவங்கும். நேரடியாகவும் மறைமுகமாகவும் 2000 பேருக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும். பல உப தொழில்கள் தோன்றவும் வழி இருக்கிறது. ஒரு காலத்தில் நெற்களஞ்சியமாக இருந்த பகுதி, தொழிற்களஞ்சியமாக மாறும் வாய்ப்பு உள்ளது.

அடிக்கல் நாட்டு விழாவில் வரவேற்றுப் பேசிய எம். ஆர். எல். தலைவர் கிருஷ்ணமூர்த்தி; பண்டைய இலக்கியங்களிலிருந்து காவிரியின் பெருமைகளை எடுத்துச் சொன்னது மட்டுமல்லாமல், தஞ்சைப் பகுதியில் பிறந்த ஜனாதிபதியைப் 'பொன்னியின் செல்வன்' என்றும் 'தமிழகத் தொழில் வளர்ச்சியின் பீஷ்மப் பிதாமகன்' என்றும் புகழ்ந்துரைத்தார். அவருடைய தமிழ் உரையைக் கேட்ட உற்சாகத்தினாலோ என்னவோ ஜனாதிபதியும் தமது தயாரிக்கப்பட்ட ஆங்கில உரையைப் புறக்கணித்து விட்டுத் தமிழில் பேச ஆரம்பித்தார். கூடியிருந்தோரிடையே ஒரே உற்சாகம்! பலத்த கைதட்டல்!

''1958-59ம் ஆண்டுகளிலேயே இந்தப் பகுதிகளில் எண்ணெய் வளம் இருப்பதற்கான சாத்தியங்களை ஆராயும்படி மத்திய அரசிடம் நான் கேட்டுக் கொண்டேன். ஆனால் அப்போது சர்வதேச எண்ணெய் விலை மிகவும் குறைவாக இருந்ததாலும், எண்ணெய் கண்டுபிடிப்பதற்கு முன்னேறிய தொழில் நுட்பம் இல்லாததாலும், வேகமாகப் பணிகள் நடைபெறவில்லை. ஆனால் இப்போதைய காலகட்டத்தில், இந்தத் துறையில் அவசியமாகவும், அவசரமாகவும் செயல்பட வேண்டியுள்ளது. சேலம் பகுதியில் கிடைக்கும் இரும்புத் தாதுவில் 44 சதவீத கனிமச் சத்துதான் இருக்கிறது. அதனால்தான் உருக்காலைக்குப் பதில் உருட்டாலை அமைந்திருக்கிறது. அதே போல் வடக்கே கிடைக்கும் நிலக்கரியைப் போல் அல்லாமல் தமிழ்நாட்டில், பழுப்பு நிலக்கரிதான் கிடைக்கிறது. ஆனாலும் 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்பது போல கிடைப்பதைப் பயன்படுத்தி தமிழ்நாடு தொழிற்துறையில் வேகமாக முன்னேறி வருகிறது'' என்றார் ஜனாதிபதி.

இந்த முன்னேற்றத்துக்குக் காவிரிப் படுகையின் கறுப்புத் தங்கமும் பெரிதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

- ப்ரியன்



எழுத்தாளர் : வாளின் முனையை விடப் பேனாவின் முனை மிகக் கூடியமா னதுன்னு நெப்போலியன் ஏன் சொன்னார் தெரியுமா?

மற்றவர் : உங்களை மாதிரி எழுத்தாளர்கள் எங்களை மாதிரி வாசகர்களை அறுக்கறதால இருக்கும்!

- எஸ். முகம்மது யூசுப்



''அந்தப் பிரயாணி ஏன் திடீர்னு மயக்கம் போட்டு விழுந்துட்டார்?''

''கண்டக்டர் டிக்கெட்டும், மீதி அஞ்சு காசும் தந்துட்டாராம்...''

- முரளிதரன்

''என்னைப் பொறுத்தவரைக்கும் அமெரிக்காவும் அடுத்த ஊரும் ஒண்ணு தான்.''

''அடிக்கடி அமெரிக்கா போவீங்களா...?''

''ஊஹூம்; அடுத்த ஊருக்கே நான் போனதில்லே!''

- சீர்காழி வி. ரேவதி



# "மரியாதைக்குரிய மனைவிக்கு..."



ஜனகராஜுடன் சேர்ந்து



மௌனிகா

## சினி சிப்ஸ் :

ரஜினிகாந்த், 'அண்ணாமலை' படப்பிடிப்பின் போது, கூட நடிக்கும் ஜனகராஜுடன் சேர்ந்து உற்சாகமாக அரட்டையடிக்கிறார்; சிரிக்கிறார்! வரவேற்கத்தக்க மாறுதல்.

●● 'எனக்கு மேக்கப் என்றாலே மிகவும் அலர்ஜி. அதோடு நான் அதிகம் மேக்கப் போட்டுக் கொண்டால் திரையில் அவ்வளவு நன்றாகவும் இருக்க மாட்டேன். என்னைப் பொறுத்தவரை இயற்கையாக இருக்கும் அழகையும் தோற்றத்தையும் வைத்து நடிப்பது தான் பிடிக்கும்!'' என்று சொல்கிறார் 'வண்ண வண்ணப் பூக்கள்' மௌனிகா.

●● சமீபத்தில் நடந்த சினிமா கேஸெட் வெளியீட்டு விழா ஒன்றில் பேசும் போது, ''போற்றுதற்குரிய தலைவருக்கும், வணங்குதலுக்குரிய கவிஞருக்கும் அன்பிற்குரிய இயக்குனருக்கும்...'' என்று சொல்லிக் கொண்டே வந்த பாக்யராஜ் மேடையிலிருந்த தம் மனைவி பூர்ணிமாவைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே ''மற்றும் மரியாதைக்குரிய என் மனைவிக்கும்....'' என்று கூறியபோது அனைவரும் சிரித்தார்கள். மற்றவர்களைச் சிரிக்க வைப்பதற்காகப் பாக்யராஜ் அப்படிக் கூறினாரா, உண்மையிலேயே அப்படிக் கூறினாரா? பூர்ணிமா பாக்யராஜுக்குத்தான் தெரியும்.

●● நாலரிடம் யாராவது பேட்டிக்குப் போனால், ''சினிமாவைப் பற்றிக் கேட்ட கேள்விகளையே கேட்டுப் போரடிக்காதீங்க பிரதர்; பொதுமக்களுக்கு நல்ல விஷயங்களைச் சொல்ற மாதிரி வித்தியாசமா ஏதாவது கேளுங்க!'' என்கிறார். ஆனால், பிரியாணி ஹோட்டலைத் தேடிப் போய் யாராவது தயிர் சாதம் சாப்பிடுவார்களா என்ன!

●● ''வாலிப வயதில் எத்தனையோ நாள் என் உருவத்தைக் கண்ணாடியில் பார்த்து வருத்தப்பட்டு அழுதிருக்கிறேன். இப்போதோ, அதே உருவத்தைக் கொண்டும் என் நடிப்பைக் கொண்டும் மற்றவர்களைச் சிரிக்க வைக்க முடிவதைப் பார்த்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறேன்!'' என்கிறார் செந்தில்.

●● பெரும்பாலும் படப்பிடிப்பு இடைவேளையின் போது மௌனமாக எங்காவது போய் உட்கார்ந்து கொள்ளும்

●● ''சமீபகாலமாக உங்கள் படங்கள் எதுவும் வெற்றிப் படங்களாக அமையவில்லையே?'' என்று சரத்குமாரிடம் கேட்ட போது, ''கணக்கில்லாமல் கால்ஷீட் கொடுத்தது ஒரு காரணம். கதை சொல்லும் போது ஒரு மாதிரியாகவும் படம் எடுக்கும் போது வேறு மாதிரியாகவும் கதை பாதை மாறிப் போய்விடுவது இன்னொரு காரணம். இனி இந்த இரண்டிலுமே கவனம் செலுத்தப் போகிறேன்!'' என்கிறார். தோல்வியிலிருந்து கற்றுக் கொள்ளத் தொடங்கினால் வெற்றிதானே!

– கலைத் தூதன்

**BPL**



# உங்கள் வாழ்க்கையின் இணைப்பு
# பிபிஎல் அஜீத்




புகழ் பெற்ற பிபிஎல் குரூப் தயாரித்து வழங்கும் பிபிஎல் - அஜீத் ப்ளாக் & ஒயிட் டிவி, கலர் டிவியைப் போன்ற அழகான தோற்றமுடையது. 51 செ.மீ. மற்றும் 36 செ.மீ. அளவுடைய இந்த டிவிகள் எலெக்ட்ரானிக் மற்றும் டர்ரெட் ட்யூனர்களோடு, பல வகையான மாடல்களில் கிடைக்கின்றன. பிபிஎல் அஜீத் தற்பொழுது SMPS நுணுக்கத்தோடு கிடைப்பதால், ஏற்றதாழ்வான வோல்டேஜ் பற்றிய கவலை இனி வேண்டாம். இடைவிடாத செயல்திறனோடு, முழுமையான பாதுகாப்போடு வருவது பிபிஎல் அஜீத். அருகாமையிலுள்ள பிபிஎல் டீலரை அணுகி, பிபிஎல் அஜீத் ப்ளாக் & ஒயிட் டிவியை இன்றே உங்கள் இல்லத்திற்கு அறிமுகம் செய்யுங்கள்.

**ப்ளாக் & ஒயிட் டிவி**



## மனதிற்கினிய ஒலி
## பிபிஎல்-அஜீத்தின்
## ஒளி

KAMERAD-NEWS/BPL-167-92 TAM

# "கவிதா சௌத்ரியா? யாரது...? ஓ! உடான்வாலியா?"

"கவிதா சௌத்ரி' என்பதை விட, 'உடான்வாலி' என்றோ 'லலிதாஜி' என்றோ சொன்னால் தான் வடக்கே எல்லோருக்கும் பளிச்சென்று புரியும்!

'உடான்' டீ.வி. ஸீரியலில், இளம் போலீஸ் அதிகாரி கல்யாணியின் பாத்திரம் நினைவிருக்கிறதா? அந்தப் பாத்திரம் பெண்கள் மனதில், பெண்களைப் பெற்றவர்கள் மனதில், ஓர் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி விட்டதென்பது உண்மை!

பஞ்சாப், அமிர்தசரஸில் பிறந்து வளர்ந்த கவிதாவை, கலைத் துறையில் ஈடுபடத் தூண்டியதே அவருடைய பள்ளி ஆசிரியைகள்தானாம்!

''என் பெற்றோரும் மிகப் பழமைவாதிகள் நிரம்பிய குடும்பத்தில் வந்தவர்களானாலும் முற்போக்குவாதிகளாயிருப்பது என் அதிர்ஷ்டமே. தங்கள் பெண்கள் வாழ்க்கையில் முன்னேற வேண்டும்; சொந்தக் கால்களில் நிற்க வேண்டும் என்று எண்ணுபவர்கள். ஆனால் அவர்கள் கூட என் அக்கா ஐ. பி. எஸ். அதிகாரியாகவும் நான் நடிகையாகவும் உருவாவோம் என்று நினைத்திருக்க மாட்டார்கள்!'' என்கிறார் கவிதா!

''ஆமாம், உண்மையிலேயே என் தந்தை மிகவும் வித்தியாசமானவர்; சிறு வயதில் எங்களுக்கு உதவியாகப் புத்தகங்களைத் தேடுவார்; அம்மாவுக்கு உதவியாகச் சட்னி அரைத்துக் கொடுப்பார். 'நான் ஆண்; இதைச் செய்ய மாட்டேன்! நீ பெண்; இதைச் செய்ய வேண்டும்' என்ற ஆணாதிக்க மனப்பான்மை அவரிடம் இருந்ததில்லை. அவர் தந்த ஊக்கமும் ஒத்துழைப்பும்தான், வாழ்க்கையில் எங்களை இந்நிலைக்கு உயர்த்தியுள்ளன!'' என்று பெருமிதப்படுகிறார் கவிதா.

''நான் புனே இன்ஸ்டிடியூட்டில் ப(ந)டித்துத் தேறியபின் நாடக மேடையில் பிரவேசித்தேன். அதில் கவர்ச்சிகரமான வருவாய் கிடையாது! இந்நிலையில் பெற்றோரைச் சார்ந்து நிற்பதும் அநாகரிகமாக இருக்கவே, விளம்பர உலகைத் தஞ்சமடைந்தேன். என்றாலும் ஒரு வனிதையின் சிரிப்பைக் காசாக்கும் இந்தக் கலை மனதுக்கு விரோதமாகப்பட்டது: I.A.M.- ல் படித்து விட்டு வந்து, ஒரு சோப்பை விற்க மண்டையை உடைத்துக் கொண்டிருந்ததைக் கண்டதும், இந்தத்

- கவிதா சௌத்ரி



துறையில் உள்ள சவால்கள் எனக்குப் புரிந்தது. ஒரே ஒரு விளம்பரத்தைச் செய்து விட்டு, அந்த வரு வாயிலே பல மாதங்களைக் கடத்தலாம். ஆனாலும், விளம்பரத் துறையில் ஓர் ஆத்ம திருப்தி கிடைப்பதில்லை.

''இத்தருணத்தில் தான், டீ.வி., நம் கருத்துக்களை வெளியிட ஒரு சக்திவாய்ந்த மீடியமாக என்னை எதிர் கொண்டது! நடிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஒருபுறம் இருந்தாலும் சமூகத்துடன் இணைந்துள்ள பிரச்னைகளை அலசும் பாத்திரங்களை ஏற்க வேண்டும் என்ற துடிப்பே என்னிடம் மிகையாக இருந்தது. அந்த அடிப்படையில் முயற்சி எடுத்து உருவானதுதான் உடான்!



'உடான்' சீரியலில் ஒரு காட்சி

''பலர் நினைப்பது போல் 'உடான்', கிரண் பேடியின் வாழ்க்கையை அடிப் படையாகக் கொண்டது அல்ல. என் குடும்பச் சூழலின் பிரதிபலிப்புத்தான். இப்போது ஆஸ்திரேலியாவில் மானேஜ் மெண்ட் கோர்ஸ் படிக்கப் போயிருக்கும் என் சகோதரி, ஓர் ஐ. பி. எஸ். அதிகாரிதான். இதில் வந்த 'தந்தை' பாத்திரமும் என் தந்தையின் பிரதிபிம்பம்தான்.

'பிள்ளைகளைப் பெற்றால்தான் பயனுண்டு; பெண் அடுத்தவர் சொத்துத் தானே' என்ற இளக்காரமான மனப் பான்மையை மாற்றி, ஒரு சாதாரணக் குடும் பத்தில் பிறந்த பெண்ணால், பெற்றோரின் ஒத்துழைப்புடன், சமூகத்தில் உயர்ந்த நிலையை அடைய முடியும் என்ற கருத்தை வலியுறுத்தவே இந்த 'உடான்' ஸீரியலை எடுத்தேன். அதே சமயத்தில் ஒரு பெண் ணால் ஒரேயடியாகச் சாதனைகளைக் குவிக்க முடியும் என்று சொன்னாலும் அது யதார்த்தவாதமாகாது! அதனால் நடை முறையில் அவள் சந்திக்க வேண்டிய சோத னைகளையும் எடுத்துக் கூற வேண்டி யிருந்தது.

''கதை சென்ற விதம், மக்கள் மனதில் ஒரு ஆழமான பாதிப்பை ஏற்படுத்தி, அவர்களை அதில் ஆவலுடன் ஈடுபட வைத்ததென்பதை, கல்யாணியின் துணிச்சலைப் பாராட்டி [illegible]களுக்கு எக்கச் சக்கமாக வந்து குவிந்த கடிதங்கள் உணர்த் தின.

''எனக்கு அம்மாவாக நடித்தவர், பெங்களூரில் ஒரு ப்யூட்டி பார்லருக்குப் போயிருந்த போது, அங்கிருந்த பெண்கள், 'கல்யாணியின் உயர்வுக்கு நீங்கள்தான் காரணம்' என்று சொல்லியிருக்கிறார்கள் என்றால், அவர்கள் கதையுடன் எவ்வளவு ஒன்றியிருக்கிறார்கள் பாருங்கள்!

''இந்த ஆர்வம், மக்களிடையே பெண் குழந்தைகளைப் பற்றிய அபிப்பிராயத் தைக் கணிசமாக மாற்றி விடக்கூடிய சக்தி பெற்றிருந்ததைக் கண்டோம்! அதனால் கல்யாணி, வாழ்க்கையில் வெற்றி பெறுவ தாகவே முடித்து விட்டோம்.

''பெண் 'என்பவள் மட்டும் ஏன் சமூ கத்தில் பிரச்னைக்குரியவளாக இருக்க வேண்டும் என்பது விளங்கவில்லை! ஓர் ஆணுக்கும் அவளைப் போலத்தான் உணர்ச் சிகளும் பிரச்னைகளும் இருக்கின்றன. பொருளாதாரப் பிரச்னை என்பது, பெண்கள் சொந்தக் கால்களில் நிற்கத் துவங்கி விட்ட இந்தக் காலத்தில் குறைந்து

வருகிறது. என்னைக் கேட்டால், எல்லாப் பிரச்னைகளுக்கும் அடிப்படை, நம்மிடையே அன்பு, பாசம், நேயம் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து வருவது தான்!

''சில நாட்களுக்கு முன், நான் ஒரு ஐஸ்க்ரீம் பார்லர் அருகில், ஒரு பேப்பர் பொறுக்கும் சிறுவனைக் கடைப் பையன் போட்டு அடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். சுற்றிலும் நிறைய பெண்கள் - பாரதப் பண்புமிக்க பெண்கள் - ஒரு வார்த்தை கண்டிக்காமல் ஐஸ்க்ரீம் சாப்பிட்டுக் கொண்டிருந்தது என்னை மிகவும் வேதனைப்படுத்தி விட்டது. தன் குழந்தை அடிபட்டால் மட்டும் தவிப்பவளா தாய்? அடிபட்டது யாராக இருந்தாலும், இரக்கம் காட்டுவதன்றோ தாய்மை! பெண்களே எழுந்து சண்டையிடுங்கள். போராளிகளாக மாறுங்கள் என்றெல்லாம் சொல்ல வில்லை! ஒரு பதற்றத்தையாவது வெளிப்படுத்த வேண்டாமா? மற்றபடி மாமியார் மாமனாருடன் ஒற்றுமையாக வாழ்வது, வயதானவர்களைப் பராமரிப்பது போன்ற நமது சமூக அமைப்புகளுடன் எனக்குப் பூரண உடன்பாடுதான்!'' என்று சொல்லும் கவிதா, ''ஃபாஷன் என்பதற்காக டைட் பாண்ட்டுகளையும் ஜீன்ஸையும் போட்டுக் கொள்வதையும், பெண்மை என நினைத்து ஆடி அசைந்து நடப்பதையும், நாணம் என நினைத்து, முகத்தை மூடிக் கொண்டு தரையில் கோலம் போடுவதையும் என்று நாம் நிறுத்துகிறோமோ, அன்றுதான் நாம் சிந்திக்கத் துவங்குவோம்; அப்போதுதான் நம்மிடையே விழிப்புணர்ச்சி ஏற்பட வாய்ப்பு வரும்!'' என்கிறார்.

தற்சமயம் இரண்டு படங்களுக்கான திரைக்கதை - வசனம் - டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றிருக்கிறார்.

நாம் விடைபெறும் போது கவிதாவின் தாய் வேடிக்கையாகக் குறிப்பிட்டார் - ''எனக்கு இவள் மூன்றாவது பெண்; இரண்டுக்கு மேல் வேண்டாம் என்றுதான் தயங்கினோம்; ஆனால் பெற்றுக் கொண்டது வீண் போகவில்லை; 'கவிதா மிகவும் புத்திசாலி, நீ அதிர்ஷ்டசாலி' என்று பிறர் புகழும் போது, இவளை ஜனிக்க வைத்த ஆண்டவனுக்கு நன்றி சொல்வேன்.''

- ஜெயஸ்ரீ ராஜ்



# ஃபாரெக்ஸ்

## உணவு விழா

ஃபாரெக்ஸ் அணிவரிசை உங்கள் குழந்தையின் துரிதமான முழு வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களை அளிக்கிறது.



4-வது மாதம் முதல், பாலுடன் கோதுமை தானியம் கலந்த ஃபாரெக்ஸ் அளித்து உங்கள் குழந்தையின் திட உணவை ஆரம்பியுங்கள்.

5-வது மாதம் முதல் குழந்தைக்கு ஃபாரெக்ஸ் வெஜ் அளியுங்கள். கோதுமை, பால்,




வைட்டமின் செறிந்த தக்காளி, கேரட் மற்றும் பயத்தம் பருப்பின் நற்பலன்கள் அனைத்தும் இதில் அடங்கியுள்ளது.

5-வது மாதம் முதல், கோதுமை, பால் மற்றும் வாழைப்பழம், மாம்பழம், ஆப்பிள் செறிந்த ஃபாரெக்ஸ் ஃப்ரூட்ஸ் கொடுத்திடுங்கள்.



6-வது மாதம் முதல் குழந்தைக்கு அளியுங்கள் ஃபாரெக்ஸ் எக். இதில் எளிதில் சீரணிக்கக் கூடிய முட்டை மற்றும் பாலின் நன்மைகள் அடங்கி-யுள்ளன.





## வளரும் குழந்தைகளுக்கு




ஃபாரெக்ஸ்
சுவையுடன் வளரும் வழி.

முக்கிய அறிவிப்பு: தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல் உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx.613.92.Tm.

எல்லோரும்
ஏகமனதா
ஜனாதிபதியைத்
தேர்ந்தெடுங்
கவாம்!

போ, போ!
உன்னோட
ஒத்துழைக்க
முடியாது!

எங்களுக்குள்ளேயும்
ஒற்றுமையா செயல்பட
முடியாது!

ஓராண்டுச் சாதனை

ஓராண்டுச் சாதனை

என்ன
இருந்தாலும்
ஊதிப் பெரிசு
படுத்தறதுல
அந்தம்மா
கில்லாடிதான்
...!

பஞ்சகச்சம்,
ஜிப்பா,
மேல் துண்டுல
சூப்பரா
இருக்கீங்க!

நீங்க
கூடத்தான்...
ஜப்பான்
டிரெஸ்ல
ஜம்முனு
இருக்கீங்க!




# கல்கி



1992
ஜூலை 5
மலர் : 50
இதழ் : 49
ஆங்கீரச
ஆனி 21


## சத்தான சந்தானம்

ஆரபி கண்கலங்கி நிற்கிறது; மோகனம் திகைப்பில் ஆழ்ந்து கிடக்கிறது. ஏன், ராகதேவதைகள் எல்லாமே வேதனையில் வாடிப் போய்த்தான் இருக்கின்றன. 'இனி நம் எழில்களையும் அவற்றின் பயன்களையும் சந்தானம் போல் சிறப்பாக உணர்த்துவார் யார்?' என்று ஏங்குகின்றன.

'கலை உலகுக்கு நஷ்டம்'; 'இசை உலகின் துரதிர்ஷ்டம்' என்றெல்லாம் சம்பிரதாயமான முறையில் சந்தானத்தின் மறைவைக் கூறி விட முடியாது. 'இன்றைய கர்நாடக இசை உலகமே சந்தானம்தான்' என்று கூடச் சொல்லுமளவில் அவர் பிரபலமாக இருந்தார். 'கச்சேரிகளுக்குக் கூட்டம் வருவதில்லை' என்று பலரும் அங்கலாய்த்துக் கொண்டிருக்கும் போது, சந்தானத்தின் கச்சேரிகளுக்கு மட்டும் எப்படி அரங்கம் நிரம்பி வழிந்தது?

கர்நாடக சங்கீதத்தின் சாஸ்திர விதிகளை இம்மியளவும் பிசகாமல் காப்பாற்றியபோதே, ஜனங்களை ஈர்க்கும் ஆற்றலையும் அவர் பெற்றிருந்தார். இந்த ஆற்றலின் பின்னால் குருபக்தி, ஞானம், பயிற்சி, கற்பனைத்திறன், திட்டமிடல், மக்களின் மன இயல்புகளைப் புரிந்து கொள்ளும் சக்தி என்று பல அம்சங்கள் இருந்தன. இவை எல்லாமாகச் சேர்ந்துதான் அவருக்குப் பெரு வெற்றியைப் பெற்றுத் தந்தன. புகழின் உச்சியில் இருந்து, தேய்பிறை காணாத பூரண சந்திரனாக மறைந்து போனார்.

மகாராஜபுரம் விசுவநாத அய்யரின் மகனாகப் பிறக்கும் பாக்கியம் பெற்றிருந்த சந்தானம், ரசிகர்களுக்குப் பெரியவரைச் சதா நினைவூட்டும் வகையில் பாடிக் கொண்டிருந்தாலும், தமக்கென்று ஒரு பாணியை வகுத்துக் கொள்ளவும் தவறவில்லை. தமது தகப்பனாரை மட்டுமின்றி மெலட்டூர் சாமாநீக்ஷிதரையும் குருவாகப் பெற்றிருந்தார்.

சினிமா என்ற வெகு ஜனத் தொடர்பு சாதனத்தின் உதவியின்றியே பிரபலமடைந்து, பெரிய வித்வானாக மட்டுமின்றி, லட்சோபலட்சம் ரசிகர்களையும் பெறுகின்ற ஆற்றல் சாமானியப்பட்டதல்ல. அந்த அசாதாரண சாதனையை நிகழ்த்திக் காட்டிய சந்தானம், அதற்கும் ஒருபடி மேலே போய் சகலப் புகழேபெற்றார். விருதுகள் குவிந்தன.

வித்வத் இருந்து விட்டால், கூடவே கர்வம் வந்து விடும். அதோடு புகழும் சேர்ந்து விட்டால் கேட்கவே வேண்டாம். ஆனால் சந்தானம் அப்படியா இருந்தார்? அவர் பாட்டைப் போலவே பேச்சும் இனிமை; அடக்கம். ரசிகர்களைத் தமது சங்கீதத்தால் கவர்ந்தது போலவே சுபாவத்தாலும் மயங்கச் செய்தார்.

சந்தானம் பாடகர் மட்டுமல்ல; வாக்கேயக்காரர். பல பாடல்களை அவரே இயற்றியிருக்கிறார். கச்சேரியின் இறுதிக் கட்டத்தில் ''மகராஜன்'' என்ற முத்திரைச் சொல்லுடன் கூடிய தில்லானாக்களை அவர் பாடும் போது, ரசிகர்களின் ஆனந்தம் எல்லை மீறும். சங்கீதத்தின் முதல் பணி, ரசிகர்களின் உள்ளத்தை சந்தோஷத்தில் நிறையச் செய்வதுதான் என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட்டார் சந்தானம்.

பல புதிய யுக்திகளைக் கையாள்வதிலும் சந்தானம் முன்நின்றார். மகன் ராமச்சந்திரனுடன் சேர்ந்து, மோகன ராக ஆலாபனையை மாறி மாறி இருவருமாகப் பாடியது ஓர் உதாரணம். இதில் சந்தானம் லேசாக ஹிந்துஸ்தானி வடிவம் தோன்றப்பாடி ஒரு ஜுகல்பந்தி 'எஃபெக்ட்' ஏற்படுத்தி விடுவார்.

இளைஞர்களை ஊக்குவிப்பதில் பிடிவாதம் கூடக் காட்டினார். ''சீசனில் எட்டு இடத்தில் நானே பாடிக் கொண்டிருப்பானேன்? வேண்டாம். இளைஞர்களுக்கு வாய்ப்புக் கொடுங்கள்'' என்று ஒதுங்கினார். திரும்பவும் அரங்குக்கு அன்பர்களால் இழுத்து வரப்பட்டார் என்றாலும் தமது உள்ளத்தைப் புரிய வைத்தார்.

மக்களின் ரசனைக்கு முக்கியத்துவம் தந்ததால் தமிழ்ப் பாடல்களைத் தமது கச்சேரிகளில் நிறையச் சேர்த்துக் கொண்டார். 'கட்டும் விழிச் சுடர்தான், கண்ணம்மா' என்று ஆரம்பித்தால் ரசிகர்கள் சொக்கிப் போவார்கள்.

அற்புதமான குரல் வளம் ஆண்டவன் தந்தது மட்டுமல்ல; அசுர சாதகத்தின் பயனாகப் பண்பட்டு மெருகேறிய ஒன்று. நன்றாக உழைத்தார்; பிரமாதமாகப் பாடினார்; ஏராள ரசிகர்களைப் பெற்றார்; நிறையவே சம்பாதித்தார்; அள்ளிக் கொடுக்கவும் செய்தார்; சந்தானத்தின் வாழ்க்கை நிறைவானது; இசையும் அப்படியே.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# அடுத்த ஜனாதிபதி!



பிராமணராகப் பிறந்துவிட்ட ஒரே குற்றத்துக்காக அவரை வெறுக்காமலிருந்தால், சர்மா ஜனாதிபதி பதவிக்குத் தகுந்தவரே என்பது புரியும். அமைதியாகவும் அடக்கமாகவும் இருப்பவர் என்றபோதிலும் அரசாங்கத் தரப்புக்கு எப்போதும் 'ஆமாம் சாமி' போட்டுக் கொண்டிருப்பவரும் அல்ல. மாநிலங்கள் அவையின் தலைவர் என்ற முறையில், அரசியல் சாசனத்தைக் கௌரவிக்கும் விதமாக அவர் தீர்ப்புகள் அமைந்தனவேயன்றி ஆட்சியில் உள்ளோரைத் திருப்திப்படுத்தும் வகையில் அல்ல.

1969 இல் காங்கிரஸ் பிளவுபட்டு இந்திரா வெளியேற நேர்ந்த போது, அவர் 'சிண்டிகேட்' பக்கம் சரியவும் இல்லை; பின்னால் இந்திரா ஆதரவாளர்கள் ஜெயப்பிரகாஷ் மீது அவதூறுகளைக் குவித்த போது அவர்களுடன் சேர்ந்து 'ஒழிக' கோஷம் போடவும் இல்லை. பொறுமையும் நேர்மையுமே அவர் நோக்கமாக இருந்தது.

சர்மா வகித்த பதவிகள் பல; முதல்வர், மத்திய அமைச்சர், அ. இ. காங்கிரஸ் தலைவர், ஆளுனர், மாநிலங்கள் அவைத் தலைவர்; உப ஜனாதிபதி. பொது வாழ்க்கையில் ஈடுபட்டு ஐம்பது ஆண்டுகள் ஆகிவிட்டன.

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் சட்டத்தில் டாக்டர் பட்டம் பெற்ற பிறகு சில காலம் பேராசிரியராகப் பணியாற்றினார். பின்னர் அரசியலில் புகுந்து 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் ஈடுபட்டுக் கைதாகிச் சிறைவாசம் அனுபவித்தார்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர் அல்லது காரியதரிசி என்ற முறையில் காங்கிரஸ் சகாக்களுடன் பேசும் போது கட்சி அரசியலைப் பற்றியும் உட்கட்சிப் பூசல்கள் குறித்தும் பேசிக் கொண்டிராமல், அரசியலுக்கும் மதத்துக்கும் உள்ள தொடர்பு எப்படி இருக்க வேண்டும், சட்டத்தின் ஆட்சி எவ்வாறு அமைய வேண்டும், அரசியல் சாசனத்தை எந்த விதமாகப் புரிந்து கொள்ள வேண்டும், மக்களின் வாழ்க்கைத் தரம் உயர எவ்வாறு திட்டம் வகுக்கப்பட வேண்டும் என்றெல்லாம் ரசமான முறையில் கல்வி போதிப்பது போல் உரையாடுவார்.

இந்திரா காந்திக்கு ஆலோசனை வழங்கி வந்தவர்களிடமிருந்து சர்மா மாறுபட்ட தருணங்கள் பல உண்டு. ஆயினும் இந்திரா இவரிடமிருந்த மதிப்பு வைத்திருந்தார். 1977 வரை இந்திராவின் மந்திரி சபையில் அங்கம் வகித்தார். ஜனதா ஆட்சிக்குப் பிறகு இந்திரா மறுபடி பதவிக்கு வந்த போது, சர்மா பல மாநிலங்களுக்கு மாறி மாறி ஆளுனராக அனுப்பப்பட்டார்.

பாஸ்கர ராவை முதல்வராக நியமித்த ஆளுனர் ராம்லால் போய்ச் சேர்ந்த பிறகு, அவரிடத்தில் வந்து சேர்ந்த சர்மா, மறுபடி என். டி. ஆரே முதல்வராக வழிவகுத்து ரணங்களை ஆற்றினார்.

பஞ்சாபில் ஆளுனராகப் பதவி ஏற்ற போது தங்கக் கோயிலுக்குப் போய்ப் பிரார்த்தனை செய்தார். ராஜ்பவன் வாசலில் இருந்த பாதுகாப்பு ஏற்பாடுகளை நீக்கி மக்கள் தம்மைக் காண வருவதை எளிதாக்கினார். பஞ்சாப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதில் முதல் கட்டமாக 'சண்டிகரைப் பஞ்சாபுக்கு மாற்ற வேண்டும்' என்று தைரியமாகச் சொன்னார். ஆனால் நற்பணியை அவர் தொடருமுன், மகாராஷ்டிரத்துக்கும் பிறகு துணை ஜனாதிபதியாக தில்லிக்கும் அவர் போக நேர்ந்து விட்டது.

துணை ஜனாதிபதி - மாநிலங்கள் அவைத் தலைவர் என்ற முறையில் அந்த சபையில் கூச்சல் போட்டு நடவடிக்கைகளுக்கு முட்டுக்கட்டை போட எண்ணியவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுத்தார். 'மன்னிப்புக் கேட்டாலொழிய அவைத் தலைவராக அமர மாட்டேன்' என்றார். இந்த உறுதி நல்ல பலன் அளித்தது.

பன்மொழி விற்பன்னரான சர்மா, உலக இலக்கியங்களிலிருந்து மேற்கோள் காட்ட வல்லவர். அவரது நேர்மை, எளிமை பற்றி யாருக்கும் சிறிதளவும் சந்தேகமில்லை. அவரது உடல் ஆரோக்கியத்துக்கு முக்கிய காரணம் இளம் வயதில் படகு செலுத்துவதிலும் நீச்சலிலும் அவர் காட்டிய ஆர்வமே.

சர்மாவுக்குப் பிடித்தவை: கவிதைகள்; சாஸ்திரீய சங்கீதம். மேல்நாட்டு இசை மேதைகள் பீதோவன் மொஸார்ட் போன்றவர்களின் இசையிலும் லயிக்கும் மனம் உடையவர்.

நன்றி : ஹிந்துஸ்தான் டைம்ஸ்

# நம்பிக்கை

## 1,50,000-க்கும் அதிகமான டெபாசிட்தாரர்களின் மனோபலம்.

நமது நாட்டின், சாதனைகள் படைக்கும் நிதி நிறுவனங்களில் ஒன்றாகப் புகழ் பெற்றது - சக்தி பைனான்ஸ். ஏழே ஆண்டுகளில் இந்தச் சாதனை. இதன் மூல காரணம் - கண்ணும் கருத்துமான சேவை, எல்லா அம்சங்களிலும் அக்கறை, மற்றும் புதுமையும் பயனும் தரும் வழிமுறைகள், இவற்றுக்கு அஸ்திவாரமாக ரூ. 500 கோடி பெருமதிப்புள்ள 'சக்தி' குழுமம். வேளாண்மை, மலைத்தோட்டங்கள், போக்குவரத்து, மோட்டார் வாகனங்கள்... பல துறைகளிலும் வெற்றிச் சாதனை. ஆகவேதான், 1,50,000 க்கும் அதிகமான டெபாசிட்தாரர்களின் அசையா நம்பிக்கையைப் பெற்றுள்ளது - சக்தி பைனான்ஸ்.

நாணயமும், கவனமும் மிக்க சேவைக்குப் பரிசாக அசைக்க முடியாத நம்பிக்கை. ஆய்திறமிக்க முதலீடு செய்பவர்கள் சக்தி பைனான்ஸை நம்புவதில் வியப்பேதுமில்லை.




## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

தலைவர்: டாக்டர் நா. மகாலிங்கம்

பதிவு அலுவலகம்: 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர்-641 018.

---

**சக்தி பைனான்ஸ் - ரூ. 500 கோடி 'சக்தி' குழுமத்தின் ஓர் அங்கம்.**


சர்க்கரை


போக்குவரத்து


சோயா


வாகனங்கள்


மலைத்தோட்டங்கள்



குளிர்பானங்கள்


நூற்பாலை


உருக்காலை

UIPC:SF:25:92



# ஆவாரம் பூ

நாகர்கோவில் கடலோரக் கிராமம் ஒன்றில் நிகழும் கதை.

தேவர் மகள் தாமரை. தேவர் தம் சின்னவீடு மோகத்தில் திரிய, மனைவி தேவரைப் பிரிந்து தனியாய் வேறு கிராமத்தில். மகள் தாமரை அம்மா போகக் காரணமாய் இருந்த அப்பாவின் சின்ன வீட்டைத் தன் வீட்டிற்குள்ளேயே நுழைய விடமாட்டேன் என்கிறாள்.

ஊர்ப் பெண்களைச் சபலிக்கும் ஆசாரி, தாமரை மீது கண் வைத்துத் தேவரிடம் உதைபட, தாமரையைப் பழிவாங்கத் தேவர் வீட்டிலேயே அனாதையாய் வளரும் அரைக் கிறுக்கு சக்கரையை உசுப்பி விடுகிறார் ஆசாரி. தாமரைக்கும் சக்கரைக்கும் இயல்பாய்க் காதல் அரும்பி விடுகிறது.

ஆசாரி இந்த விஷயத்தைத் தேவர் காதுக்கு எட்டச் செய்ய, சந்தையில் சக்கரையை மாட்டடி அடித்துக் குற்றுயிரும் குலையுயிருமாய்க் கடாசி, ''யாராவது சொட்டுத் தண்ணீர் கொடுத்தாலும் இதே கதிதான்'' என்று தேவர் கர்ஜிக்கிறார். கிராமமே ஒதுங்கி விடுகிறது.

சக்கரை காணாமல் போகிறான். தேவர் தாமரைக்கு மாப்பிள்ளை பிடிக்கிறார்.

ஆசாரி மனம் திருந்தி, சக்கரையைத் தேடிப் போக, சக்கரை 'பிச்சுவா' கத்தியுடன் திரும்பி வந்து தேவரை நாலைந்து இடத்தில் கோடுபோட தேவர் அவனை 'ஆண் பிள்ளை' என ஏற்றுக் கொள்கிறார். பின் என்ன சுபம்தான்!

சில ஆண்டுகளுக்கு முன் கேரளாவில் வருடக்கணக்கில் ஓடிய 'தகரா' வின் தமிழ்ப் பதிப்புத்தான் இது.

தேவராக நாஸர். நடிப்பில் ஏகமுதிர்ச்சி. சக்கரையாகப் புதுமுகம் வினீத். கமலின் அச்சுப்போல் நடிக்கிறார். தாமரை நந்தினி. கல்லுக்குள் ஈரம் அருணாவின் தங்கை. நடிப்பு வருகிறது.

கிராமியச் சூழலில், போலித்தனம் இல்லாமல் செயற்கை கலக்காமல் இருப்பதால், கதை மெல்லத்தான் நகர்கிறது.

படத்திற்குப் படம் இரட்டை அர்த்த வசனம் பேசும் கவுண்டமணி இதிலும் ஆசாரியாக வந்து அங்கங்கே பேசுகிறார்.

ஃப்ரேமுக்கு ஃப்ரேம் வித்தியாசமான கோணம் காட்டித் தமிழில் வித்தியாசமான கவிதை பாடியிருக்கிறார் மலை[illegible]ாள இயக்குனர் பரதன்.

இளையராஜாவின் இசை இந்தப் ப[illegible]த்தில் புதுக்கவிதையாய் இழைகிறது.

சின்ன இழையான கதை, வித்தியாசமான கதையோட்டம், அதிகம் பேசாத பாத்திரங்கள், இயல்பாய் - பொய்க் கலப்பில்லாமல் இருக்கும் காதல்; காதலைத் தொடர்ந்த மனித உறவுகள்... இதெல்லாம் தமிழுக்குப் புதுசு!

– மர்ம யோகி

# நிலா மயக்கம்

## 13

வீட்டில் விளக்கெரியவில்லை. யாருக்கும் விளக்குப் போட்டு, வெளிச்சத்தை வரவழைக்க வேண்டுமென்று தோன்றவில்லை. வாழ்க்கையே இருட்டில் அமிழ்ந்து விட்ட பின், விளக்கு வெளிச்சம் என்ன செய்து விட முடியும் என்று அந்த வீட்டில் இருந்த ஒவ்வொருவருக்கும் தோன்றி விட்டதோ என்னவோ!

'கோடி ரூபா கொடுத்தாலும் இந்தப் பொண்ணு வேண்டாம்மா.'

'ஏண்டா?'

'அசிங்கத்தை வாய் விட்டுச் சொல்லச் சொல்றியா?'

'அப்படி என்னடா அசிங்கத்தைக் கண்டுட்டே நீ?'

'நான் இந்தப் பொண்ணைப் பாத்திருக்கேன். தனியா இல்ல. வேற ஒரு ஆம்பளையோட. நிருச்சில. லாட்ஜ்ல. போதுமா? இதுக்கு மேல சொல்லணுமா?'

'ச்சீ. ச்சீ. எழுந்திருடா. போலாம். சொல்லிட்டு இன்னும் உக்காந்திருக்கியே. எழுந்திருடான்னா.'

போய் விட்டார்கள். யாரையும் மறு பேச்சுப் பேச விடாமல், பாவமன்னிப்புக்குக் கூட ஒரு வாய்ப்புக் கொடுக்காமல், திரும்பிக் கூடப் பார்க்காமல், படியிறங்கிப் போய் விட்டார்கள். போனவர்கள் சும்மா இருக்கப் போவதில்லை. கண், காது எல்லாம் ஒட்ட வைப்பார்கள். பார்க்கிறவர்களிடமெல்லாம் சொல்லி வைப்பார்கள். இனி புவனாவை யார் பார்க்க வந்தாலும், வருகிறவர்களின் முதல் வாக்கியமாக, 'ச்சீ. ச்சீ... இந்தப் பொண்ணா?' என்றுதான் இருக்கப் போகிறதோ?

குடும்பம் அப்படியே உறைந்து போய் விட்டது.

நாற்காலியில் உட்கார்ந்தபடியே என்னென்னவோ யோசனையில் ஆழ்ந்திருந்த தேவராஜ் கண் விழித்தான். தலை அபாரமாய் வலித்தது. நான்கு கத்தியல்கள் நான்கு புறங்களில் இருந்து அவன் தலையை அழுத்துகிற மாதிரி உணர்ந்தான். சுற்றிலும் பார்த்தான். அலங்காரத் துடனேயே புவனா ஒரு மூலையில் சுருண்டிருந்தாள். தாத்தாவும் பாட்டியும் இருந்த இடம் தெரியவில்லை. குறட்டைச் சத்தம் மட்டும் ஏதோ ஓர் மறைவிலிருந்து வந்து அவன் காதுகளைத் தாக்கியது.

ஒரு தலைவலி மாத்திரையைப் போட்டுக் கொண்டால் தலைவலி சமாதானமாகி விடும் என்று தோன்றியது. எழுந்தான். விளக்கைப் போட்டான். ஹாலின் இன்னொரு மூலையில் சுருண்டிருந்த அம்மா எழுந்து கொண்டாள்.

''சாப்பிடறியாடா தேவு?''

''வேணாம்மா'' என்றான். தலைவலி மாத்திரை தேடுவதற்காக விளக்கைப் போட்டு அம்மாவின் தூக்கத்தைக் கெடுத்ததற்காக வருத்தப்பட்டான். கூடத்தில் இருந்த ஷெல்ஃபில் மாத்திரை தேடினான். கிடைக்கவில்லை.

தன் அறைக்குள் நுழைந்தான். நந்தினி கட்டிலில் படுத்திருந்தாள். ஃபேன் கூடப் போட்டுக் கொள்ளாமல் புழுக்கத்தில் கிடந்த அவளைப் பார்க்கும் போது பரிதாபமாக இருந்தது. ஒருவர் காரணமாக அத்தனை பேரும் சிலுவை சுமக்கிறார்களே என்று எண்ணிய போது, அவனுக்குள் மீண்டும் புவனா மீது மூர்க்கமான கோபம் மூண்டெழுந்தது. வேண்டாம் தேவு. கோபப்படாதே. கோபப்பட்டு மறுபடி கசப்பு வளர்க்காதே.

எங்கே போகும் இந்தத் தலைவலி மாத்திரைகள் எல்லாம். வீட்டில் ஒரு மாத்திரை கூடவா இருக்காது? நந்தினியின் கைப்பை ஷெல்ஃபில் அவன் கை இடறியது. ஒருவேளை அதில் இருந்தாலும் இருக்கலாம் என்று தோன்றியது. கைப்பையை எடுத்துக் கொண்டு, நந்தினி புழுக்கமின்றி உறங்குவதற்காக ஃபேனைச் சுழல விட்டு, ஹாலுக்குக் கைப்பையுடன் வந்தான். திறந்து தேடினான். வெளிச்சத்தில் மாத்திரை கிடைக்கவில்லை. திறந்திருந்த ஒரு கடிதம் தெரிந்தது. அதில் ஒரு வரியில் 'புவனா' என்று எழுதப்பட்டிருந்தது தெரிந்தது. கடிதத்தை எடுத்தான்.

நந்தினியின் முந்தைய அலுவலகத் தோழி கல்யாணி எழுதியிருந்த கடிதம் அது. அதில் புவனா என்ற பெயர் ஏன் இடம்பெற வேண்டும்? புவனாவை நலம் விசாரித்து வெகு இயல்பாக, சாதாரணமாக எழுதப்பட்ட

சுபா

வ்ரியா அது? இல்லை...

மனிதனுக்கே இயல்பாக உள்ள 'தெரிந்து கொள்ள முனையும் பூனை ஆவல்' தேவராஜையும் உந்தியது. அவன் கடிதத்தைப் பிரித்துப் படிக்கத் தொடங்கினான்.

கடைசியாகப் புவனா, நந்தினியுடன் மனம் விட்டுப் பேசியது சென்னைப் பூங்காவில். அதே மாதிரி இன்னொரு முறை மனம் விட்டுப் பேச வேண்டும் என்று புவனா நந்தினியை அழைத்துக் கொண்டு கப்பன் பார்க்கிற்கு வந்திருந்தாள்.

''சொல்லு புவனா'' என்றாள் நந்தினி.

'எல்லாம் உன்னாலதான் அண்ணி' என்று விரல் நீட்டிக் குற்றம்சாட்ட புவனா அழைத்திருக்கிறாளோ என்று அவளுக்குப்பட்டது. எதுவாக இருந்தாலும் புவனா வெளிப்படுத்தி விட்டால் மனத்தவிப்பு குறைந்து போகும்.

''அண்ணி, யாரையும் ஏமாத்தி என்னை அடுத்தவன் தலைல கட்ட வேணாண்ணி. ஏற்கெனவே இன்னொருத்தன் பின்னாடி போனவங்கறதைச் சொல்லி, அதுக்கப்புறமும் என்னை ஒருத்தனுக்குப் புடிச்சிருந்தா மட்டும் என்னைக் கட்டிக் குடுங்கண்ணி! அண்ணன்கிட்டச் சொல்லுங்க.''



புவனா எந்தவித முன்னறிவிப்புமின்றித் திடீரென வார்த்தைகளைக் கொட்டி விட்டாள். அவள் முகத்தில் அழுகை இல்லை. வருத்தம் இல்லை.

''எங்களுக்கு என்ன செய்யணும்னு தெரியும். உன் இஷ்டத்துக்குப் போய் ஒரு தடவை இப்படிச் சீரழிஞ்சது போதும். ரேடியோலயும், டீவியிலயும் பத்திரிகையிலயும் நெறையப் பேசுவாங்க. எழுதுவாங்க. பெண் விடுதலை, முன்னேற்றம்னு எல்லாம் சொல்லுவாங்க. அதெல்லாம் நம்ப வேணாம்னு அவகிட்ட சொல்லு. செகண்ட் ஹாண்ட்னு தெரிஞ்சா எந்த மடையனும் பக்கத்துல கூட வர மாட்டான். நாங்க கூட்டிட்டு வர்ற பையனுக்குக் கழுத்தை நீட்டச் சொல்லு. அவனை ஒண்ணும் வாயத் தெறக்க வேணாம்னு சொல்லு.''

''அண்ணன் இப்படிச் சொல்றாரே புவனா. அவர் சொல்றதிலயும் நியாயம் இருக்கற மாதிரி தோணுதே.''

ஐஸ்க்ரீம் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு குழந்தையையே வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த புவனா திரும்பினாள்.

''மனசு கேக்கலைண்ணி. திருட்டுத்தனம் பண்ற மாதிரி இருக்கு. என்னை நம்பி ஒருத்தன் என்னைக் கட்டிக்கப் போறான். என்னை நல்லவன்னு நம்பித்தானே தாலி கட்டுவான். நான் சொல்லலைன்னா நம்பிக்கைத் துரோகம் செஞ்ச மாதிரி இருக்காது? அண்ணன் இன்னைக்கு மறைச்சி என்னைக் கல்யாணம் பண்ணிக் குடுத்துட்டார்னே இருக்கட்டும். நாளைக்கு என் புருஷனுக்கு நான் ஷ்யாம் சுந்தரோட சுத்தினது வேற யார் மூலமாவது தெரிஞ்சா என்ன ஆவும்? அப்ப கொழந்தை குட்டின்னு ஆயிருந்தா என் நெலைமை எப்படி இருக்கும்? அப்ப நான் இந்த வீட்டுக்குத் திரும்பி வந்துட்டாப் பரவாயில்லியா? வாழா வெட்டின்னு பேர் எடுத்தாப் பரவாயில்லியா? எனக்கும் என் கொழந்தைக்கும் சேர்த்து மனசுல வலியே யில்லாம அண்ணனால் சோறு போட முடியுமா? அண்ணன் அப்படித்தான் சொல்வாரு. நீதான் எனக்கு இப்பவும் ஹெல்ப் பண்ணனும் அண்ணி - அப்பப் பண்ண மாதிரியே.''

''அப்படின்னா?''

''தப்பா எடுத்துக்காத அண்ணி. நீ மனசார என்னையும் ஷ்யாம் சுந்தரரையும் சேத்து வக்க ஹெல்ப் பண்ணே. நாத்தனார் நல்லா இருக்கணும்னுதானே? இப்பவும் அதே மாதிரி நான் நல்லா இக்கணுங்கறதுக்காக ஹெல்ப் பண்ணு அண்ணி.''

''என்ன செய்யச் சொல்றே புவனா?''

''என்னை யாராவது பொண்ணுப்பாக்க வந்தா அவுங்க கிட்ட நீதான் சொல்லணும். அண்ணனுக்குத் தெரிஞ்சி சொன்னாலும் சரி. தெரியாம சொன்னாலும் சரி! என்ன?''

''சரி'' என்றாள் நந்தினி பெருமூச்சு விட்டுக் கொண்டு.

''ஹலோ.... யாரு பேசறது?''

''நான்... நான் வந்து நந்தினி.''

''நந்தினின்னா?''

''சாயங்காலம் நீங்க வந்து பொண்ணு பாக்கப் போறீங்கல்ல. புவனான்னு....''

''ஆமா.''

''நான் புவனாவுக்கு அண்ணி.''

''அப்படியாம்மா ரொம்ப சந்தோஷம். உங்க சம்பந்தம் எங்களுக்கு அமைய ணும்னு நான் ஏழுமலையான்கிட்ட வேண்டிக்கிட்டு வந்திருக்கேன். உங்க வீட்டுக்காரரு தங்கமானவரு. அவரா வந்து பேசின மொறை என்ன? அடக்கம் என்ன? உங்க வீட்டுக் காரரைப் பாத்தப்புறம் எங்க ளுக்குப் பொண்ணு கூட பாக்க வேணாம்னு தோணிட்டது. சொல்லும்மா என்ன விஷ யம்?''

''நீங்க பையனுக்கு என்ன வேணும்?''

''சம்பந்தியாவப் போறவம்மா. பைய னோட அப்பா.''

''பிரயாணமெல்லாம் சவுரியமா இருந் துதா?''

''எல்லாம் நல்லா இருந்ததும்மா. ஹோட்டல்ல ரூமும் டீசன்டா இருக்கு. சாப் பாடு டிபனும் நல்லாத் தரமா இருக்கு. பொண்ணு வீட்டுக்காரங்க ஏற்பாடுன்னா இப்படித்தான்டி இருக்கணும்னு நான் என் சம்சாரத்துக்கிட்டச் சொல்லி வாயை மூடலை. அதுக்குள்ள போன் வந்திரிச்சி.''

''உங்களை என் அப்பா மாதிரி நெனைச்சிக்கிட்டு ஒரு விஷயம் சொல் றேங்க. நான் சொல்றதைக் கேட்டுட்டு அப்பு றம் நீங்க யோசிச்சி உங்க முடிவைச் சொல்லுங்க. நான் உங்க கிட்ட பேசி னேன்னு தயவு செய்ஞ்சி என் வீட்டுக்காரர் கிட்ட சொல்லிடாதீங்க.''

''என்னம்மா. ஒண்ணுமே புரிய லையே. பேச்சு கொழப்பமா இருக்குதே.''

''எங்க புவனா ரொம்ப நல்ல பொண்ணுதான். கொழந்தை மாதிரி. பெரிய வங்க ஏமாத்துனாக் கொழந்தைங்க ஏமாந் திடறது இல்லையா... அந்த மாதிரி எங்க புவனா....''

நந்தினி முகத்தில் மண்டிய சோகத் துடன் டெலிஃபோன் ரிசீவரை வைத்தாள். பொதுத் தொலைபேசிக் கூண்டில் இருந்து வெளியே வந்தாள். ஒருபக்கம் அழுகை யாய் வந்தது. இன்னொரு பக்கம் பயமாய் இருந்தது.

மாலையில் அவர்கள் பெண் பார்க்க வரப் போவதில்லை. உரையாடலைத் துவக் கியபோது பலாச்சுளையும், தேனுமாய் இருந்த அவரது பேச்சு உரையாடலை முடித்துக் கொண்ட போது கொதிக்கும் ஈயமும், வெடிக்கும் எரிமலையுமாய் மாறிப் போனது அவளுக்கு ஒன்றும் ஆச்சரியத்தைத் தரவில்லை. அப்படித்தான் இருக்கும் என்று அவள் எதிர்பார்த்தாள்.

ஆனால் புவனாவின் பிடிவாதம் அவளை வேறொன்றும் செய்ய விட வில்லை. தேவராஜ் மாப்பிள்ளை வீட்டுக் காரர்கள் வரப்போகிறார்கள் என்று என் னென்னவோ ஏற்பாடுகள் எல்லாம் செய்து கொண்டிருக்கிறான். அவர்கள் வீட்டுக்கு வராமலேயே திரும்பிப் போனது அறிந்தால் என்ன செய்வான்? அவன் சந்தேகம் யார் மீது திரும்பும்? உரலுக்குள் தலையைக் கொடுத்து விட்டு இப்படி இடிக்குப் பயந்து கொண்டிருக்கக் கூடாது.

அன்று மாலை அவளையும், புவனா வையும் தவிர அனைவருக்கும் ஏமாற்றம்.

''தலைவி ஏன் அந்த அமைச்சரை 'கெட் அவுட்'னு சொல்லிட்டாங்க ளாம்...?''

''அவுங்களுக்கு 'கட்-அவுட்' போதுமான உயரத்துக்கு வைக்க லைங்கிற கோபமாம்!''

- சீர்காழி வி. ரேவதி





"உங்களை வாழ வெச்சவங்களே உங்களுக்கு எமனா மாறினாலும் ஆச்சரியப்படறதுக்கில்லே..."

"அப்ப, தொகுதிப் பக்கம் தலை காட்டக் கூடாதுன்னு சொல்றீங்க... அதானே?"

- சீர்காழி வி. ரேவதி

ஒரு மாதம் ஆகியிருக்கலாம். அந்த ஒரு மாதத்தில்தான் எவ்வளவு சம்பவங்கள். பேப்பர்களில் குற்றங்கள் பெருகியிருந்தன. இன்னும் இரண்டு குடும்பங்கள் புவனாவைப் பெண் பார்க்க வந்துவிட்டு, விஷயம் அறிந்து கொண்டு, கூடையிலிருந்து வெளியே நழுவும் பாம்பு போல் நழுவிப் போயிருந்தார்கள். வீட்டில் யாரும், யாருடனும் சிரித்துப் பேசிக் கொள்ள முடியாமல், தாத்தாவும் பாட்டியும் முன்னறையிலேயே முடங்கினார்கள். அம்மா சமையல் அறையிலேயே ஆமை ஓட்டுக்குள் அடங்கி இருப்பது போல் அடங்கி இருந்தாள்.

புவனாவை தேவராஜ் தையல் கிளாஸிற்கும், டைப்ரைட்டிங் கிளாஸிற்கும் ஒரு மனமாற்றத்திற்காகப் போகச் சொல்லி அவளும் போய்க் கொண்டிருந்தாள்.

அப்படி அவள் வெளியே போயிருந்த ஒரு மாலை நேரத்தில் தேவராஜ் வீட்டுக்கு வந்து சபை கூட்டினான்.

நந்தினியை நடுவில் நிற்க வைத்தான்.

''நீ பெரிய ஆளு நந்தினி'' என்றான். இன்றைக்கும் அவன் மனத்தில் ஓடிய எண்ணங்களை வெளிப்படுத்தாமல் அவன் கல்முகம் முகமூடியாய் அவனுக்கு உதவிக் கொண்டிருந்தது.

''என்ன சொல்றீங்க?'' என்று நந்தினி பயந்த குரலில் கேட்டாள்.

''வீட்ல இருந்துக்கிட்டே அஞ்சாம் படை வேலை செய்ஞ்சிருக்கியே. அதைச் சொல்றேன்.''

''டேய் தேவு. அவ என்னடா பண்ணா, பாவம்....''

''ஆமா. ரொம்பப் பாவம். இங்க பாரு நந்தினி. கல்யாணி கிட்டேர்ந்து ஒனக்கு வந்த லெட்டர். இதை நான் முன்னாலேயே படிச்சிட்டேன். ஆனா இத்தனை நாள் ஒன்னுமே சொல்லலை. நீதான் புவனா வீட்டை விட்டு ஓடிப் போறதுக்குக் காரணம்னு இந்த வீட்ல யாருக்குமே தெரியாது. ஏன் சொல்லலை தெரியுமா? நடந்து முடிஞ்சி போச்சி. இனிமே அதை நோண்டறது அனாவசியம்னுதான் நான் கௌறலை. ஒனக்கு லவ்வைப் பத்தி என்ன தெரியும் நந்தினி? காதலர்களை ஒன்னு சேத்து வச்சியே. ரெஜிஸ்ட்ரார் ஆபீஸ்ல கல்யாணம் பண்ணிக்கறதுக்கு ஒதவியா இருந்தியே. என்ன ஆச்சி? என் கிட்ட சொல்லியிருந்தா, நான் அந்தப் பையனைப் பத்தி விசாரிச்சிருப்பேன்ல? நல்லவனா, கெட்டவனான்னு தெரிஞ்சி முடிவெடுத்திருப்பேன்ல? எல்லாத்தையும் கெடுத்துட்டியே. போகட்டும்னு விட்டுட்டேன். ஆனா இன்னிக்கு ஒன்னைக் கேட்டே ஆகணும்னு தோணிடிச்சி. புவனாவைப் பொண்ணு பாக்க வர்றவங்ககிட்டல்லாம் நீதான் புவனாவைப் பத்தி டமாரம் அடிச்சிருக்கியாமே. எப்படித் தெரிஞ்சதுன்னு கேக்காதே. எப்படியோ தெரிஞ்சிடிச்சி. எதுக்காக அந்த மாதிரி செய்றே நந்தினி? ஏன் என் தங்கச்சியோட வாழ்க்கையைக் கெடுக்கறே? அவளும் ஒன்னை மாதிரி ஒரு பொண்ணுதானே? அவ வாழறதைக் கெடுக்கறதில ஒனக்கு அப்படி என்ன சந்தோஷம்? இப்படி நீ நடந்துக்கறேன்னா ஒரே ஒரு காரணம்தான் இருக்கணும். நீ எவனையோ லவ் பண்ணியிருக்கே. அது நடக்கலை. ஒன்னை என்தலையில கட்டி வெச்சிட்டாங்க. ஒனக்கு வெறுப்பு. எங்கூட வாழப் பிடிக்கலை. ஒன் வாழ்க்கை நாசமாய்டிச்சின்னு நீ நெனைச்சிட்டே. ஒனக்குப் பழி வாங்கணும்னு தோணிடிச்சி. அதனால புவனாவுக்கு நல்லது செய்யற மாதிரி நடிக்கறே. அவளை நாசமாக்கிக்கிட்டிருக்கே. வேணாம் நந்தினி. இந்த மாதிரி பொண்டாட்டி எ ன க் கு வேணாம். இப்பவே, இந்த நிமிஷமே நீ வீட்டை விட்டுப் போய்டு.''

தேவராஜ், கோபம் எதுவுமின்றி மிகச் சாதாரணமாய், உணர்ச்சியேயில்லாமல் ஒவ்வொரு வார்த்தையாகக் கோத்துக் கோத்துப் பேசினான்.

(தொடரும்)

# "பாட்டு இருக்க பாலிடிக்ஸ் எதற்கு?"

**- வாணிஜெயராம் கூறுகிறார்...**

"**க**ர்நாடக இசைப் பாரம்பரியம் கொண்ட குடும்பம் எங்களுடையது என்றாலும் கூட, எனக்குச் சினிமாப் பாட்டில் சிறு வயதிலிருந்தே மிகவும் விருப்பம். அதுவும் இந்திப் படப் பாடல்கள் மீது தணியாத மோகம் என்றே கூறலாம். எப்போது பார்த்தாலும் நான் ரேடியோவில் பாட்டு கேட்டுக் கொண்டிருப்பேன். என் அம்மா கூட, ''என்ன எப்போது பார்த்தாலும் சினிமாப் பாட்டு கேட்டுக் கொண்டு? போய் வேலையைப் பார்!'' என்று பல முறை கடிந்து கொண்டதுண்டு. அந்த அளவுக்கு இந்திப் பட ''மெலடி''கள் என்னைக் கவர்ந்திழுத்தன.

''இந்த மோகமே மெல்ல மெல்ல என்னுள் வளர்ந்து, நானும் சினிமாவில் நுழைந்து, பிரபல பாடகியாக வர வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்டியது. ஆனால் என் அம்மாவோ, ''நம் குடும்பம் ஆசாரமான குடும்பம். நீ சினிமா உலகுக்குப்போவதற்கு நான் ஒரு போதும் சம்மதிக்க மாட்டேன். ஒரு நல்ல மாப்பிள்ளை பார்த்து, உன்னை அவர் கையில் ஒப்படைத்து விடுகிறேன். அப்புறம் உன் பாடு; உன் கணவர் பாடு'' என்று கூறுவார். அம்மாவின் கண்ணோட்டத்தில் அவர் கருத்துச் சரியானது என்பதால், நான் என் ஆர்வத்துக்கு அணை போட்டுக் கொண்டேன்.

"**க**ல்லூரிப் படிப்பை முடித்தபின் ஸ்டேட் பாங்கில் வேலைக்குச் சேர்ந்தேன். சென்னை, ஹைதராபாத், பம்பாய் தலைமை அலுவலகங்களில் சுமார் மூன்றரை வருடங்கள் பணிபுரிந்திருக்கிறேன். பாங்கில் பணிபுரிந்த போது கூட நான் சும்மா இருக்கவில்லை. வங்கிகளுக்கிடையிலான பேச்சு, பாட்டு, ஓவியப் போட்டிகளில் பங்கேற்று என் திறமையை வெளிப்படுத்தினேன். ஹைதராபாத்திலிருந்த போது, 144 வங்கிக் கிளைகளிலிருந்து வந்திருந்தவர்கள் பங்கேற்ற ஓவியப் போட்டியில், நான் கரித் துண்டால் வரைந்த ஒரு



பள்ளி மாணவியாக...

லதா மங்கேஷ்கருடன்...





கணவரோடு இந்திரா காந்தியைச் சந்தித்த போது...

குழந்தை ஓவியத்துக்கு முதல் பரிசு கிடைத்தது!

''அப்போதுதான் எனக்குத் திருமணம் நடந்தது. என் அக்கா வீட்டில் நடந்த ஒரு விழாவின் போது, நான் பாடிய பாட்டைக் கேட்ட ஒரு பெண்மணிக்கு, என் குரல் மிகவும் பிடித்துப் போய் விட்டது. நான்தான் மருமகளாய் வர வேண்டும் என்று முடிவு செய்து, அப்படியே நிறைவேற்றிக் கொண்டு விட்டார் அவர். என் கணவர் ஜெயராம் அப்போது பம்பாயில் பெல்ஜியம் சேம்பர் ஆஃப் காமர்ஸில் பணிபுரிந்து கொண்டிருந்தார். நான் பம்பாய்க்கு மாற்றல் வாங்கிக் கொண்டேன்.

''என் கணவருக்கும் என் குரல் வளத்தின் மீது அத்தனை அக்கறை. 'உன் குரல் இனிமைக்கு, இந்துஸ்தானி இசை கற்றுக் கொள்ளலாம்' என்று அறிவுரை கூறியதோடு, அதற்கான ஏற்பாடுகளையும் செய்தார். 'நாமாக சினிமா சான்ஸ் கொடுங்கள் என்று யாரிடமும் போய்க் கேட்கக் கூடாது. ஆனால், உன் திறமைக்கு, வாய்ப்பு உன்னைத் தேடி வரும். அதுவரை காத்திரு!' என்று அறிவுரையும் கூறினார்.

''என் இந்துஸ்தானி இசைக் குரு, பாட்டியாலாவைச் சேர்ந்த பிரபல இந்துஸ்தானி பாடகர் உஸ்தாத் அப்துல் ரஹ்மான் ஹாசாப். ஒருநாள், அவர், பிரபல இசையமைப்பாளர் வசந்த் தேசாய்ஜியிடம், 'என்னிடம் ஒரு மதராஸி பெண் இந்துஸ்தானி இசைக் கற்றுக் கொள்ளுகிறாள். தேன் குரல்; அற்புதமாய்ப் பாடுகிறாள்; அவள் பாடி நீங்கள் கேட்க வேண்டுமே!' என்று கூறியிருக்கிறார்.

''வசந்த் தேசாய் என்னைச் சந்திக்க விருப்பம் தெரிவிக்கவே நானும், என் கணவருமாய்ப் போனோம். அனுமான் பக்தரான அவர் பூஜையை முடித்து விட்டு, எங்களைச் சந்தித்தார். என்னை ஒரு பாட்டுப் பாடும்படி கேட்க, நான் பாடினேன். பாடி முடித்ததும் மறுநாள் பத்து மணிக்கு 'பாம்பே லேப்' ஸ்டுடியோவிற்கு வந்து விட்டால், ரெக்கார்டிங் முடித்து விடலாம்' என்றதும், எங்களுக்கு ஒரே ஆச்சரியம்! மறுநாள், 'பாம்பே லேப்'பில் ஒரு மராத்தி நாடகத்துக்காகப் பாடினேன். அடுத்தாற்போல, இன்னொரு மராத்தி நாடகத்துக்காக, பிரபல பாடகரான குமார் கந்தர்வாவுடன் இணைந்து ஒரு டூயட். அந்தப் பாட்டு, விரைவில் சூப்பர் ஹிட் ஆகி, மகாராஷ்டிராவின் மூலை முடுக்குகளில் எல்லாம் என் பெயர் பிரபலமடைந்தது.

ஆர். வியிடமிருந்து தேசிய விருது...







வாணி வரைந்த ஓவியங்கள்

''சில நாட்கள் கழித்து, 'ரிஷிகேஷ் முகர்ஜி, பிலிம் இன்ஸ்டிடியூட்டிலிருந்து வந்த ஜெயாபாதுரி என்ற புதுமுகத்தைப் போட்டு ஒரு படம் எடுக்கப் போகிறார். ஹீரோயின் புதுமுகம் என்பதால், பாடுவதற்கும் ஒரு புதுக் குரலைப் பயன்படுத்த நினைக்கிறார். அவரிடம் உன்னைப் பற்றிக் கூறி இருக்கிறேன். நாளைக் காலை ரிஷிகேஷ் முகர்ஜி, குல்சார் இருவரும் வருகிறார்கள். நீயும் வா, பாடிக்காட்டு...' என்றார் வசந்த் தேசாய்ஜி.

''அவர்களுக்கு என் குரல் பிடித்துப் போய், ''குடி'' படத்தில் மூன்று பாடல்கள் பாடும் வாய்ப்புக் கிடைத்தது. அந்தப் பாடல்கள் அபார ஹிட் ஆகி, என் பெயர் இந்தியா முழுவதிலும் பரவியது!

''சென்னையில், சம்பூர்ண ராமாயணத்தை இந்தியில் டப்பிங் செய்யும் பணி நடந்த போது, சில பாடல்கள் பாடுவதற்காக என்னை அழைத்தார்கள். நான் சென்னைக்கு வந்தேன். இசையமைப்பாளர் கே. வி. மகாதேவன், 'என்னம்மா! நீங்க தமிழ்ப் பெண் என்று அறியும் போது, ரொம்பச் சந்தோஷமாய் இருக்கிறது. வாணி ஜெயராம் என்றால் ஏதோ வடக்கத்திப் பெயர் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்! நீங்க ஏன் தமிழிலும் பாடக் கூடாது?' என்று கேட்டார். 'தமிழ்ப் படங்களில் பாட வாய்ப்புக் கிடைத்தால், அது என் பாக்கியம்!' என்றேன்.

'தாயும் சேயும்' என்ற படத்துக்காக 'பொன்மயமான காலம் வரும்' என்ற பாடலைப் பாடினேன். அதுதான் நான் பாடிய முதல் தமிழ் சினிமாப் பாட்டு! ஆனால் அந்தப் படம் வெளிவரவே இல்லை. நான் பாடி, வெளிவந்த முதல் தமிழ்ப் படம் 'வீட்டுக்கு வந்த மருமகள்'. அதில் டி. எம். சௌந்தரராஜனுடன் ஒரு டூயட். ஆனாலும் நான் பாடி மிகவும் பிரபலமான தமிழ்ப் பாடல் 'தீர்க்க சுமங்கலி' படத்தில் இடம்பெற்ற 'மல்லிகை, என் மன்னன் மயங்கும்' பாடல்தான்.

''கே. வி. மகாதேவன் அவர்கள் இசையமைப்பில், சங்கராபரணம் படத்துக்காக, 'மானச சஞ்சரரே!' பாடிய அனுபவம் மறக்க முடியாதது. பி.பி.சிக்காக, நான் அளித்த பேட்டியின் போது, அந்தப் பாடலைப் பாடிக் காட்டினேன். ரெக்கார்டிங் முடிந்த பின், ஸ்டுடியோவிலிருந்த பிரிட்டிஷ் டெக்னீஷியன்கள், 'பாட்டைக் கேட்டுக்

கொண்டே இருக்க வேண்டும் போல இருக்கிறது' என்றார்கள். இசை, மொழிகளுக்கு அப்பாற்பட்டது என்பதற்கு இதைவிட என்ன நிரூபணம் தேவை?'' என்று கேட்கும் வாணிஜெயராம், கே. வி. மகாதேவனின் இசையமைப்பில்தான் சிறந்த பாடகிக்கான தேசிய விருதுகளை இருமுறை பெற்றிருக்கிறார்.

**ப**ல்வேறு இந்திய மொழிகளில் எட்டாயிரத்துக்கும் அதிகமான பாடல்களைப் பாடியிருக்கும் வாணிஜெயராம், தாம் பாடிய எல்லா மொழிகளிலுமே, சிறந்த பாடகிக்கான விருதுகள் பெற்றிருப்பதோடு மொத்தம் மூன்று முறை தமிழ், தெலுங்கு, மலையாள மொழிப் பாடல்களுக்காகத் தேசிய விருதும் வாங்கியிருக்கிறர்.

ஆயினும், ''திரைப்படப் பாடல் என்ற பாதையிலிருந்து சற்றே விலகி, தெய்வீக இசை நிகழ்ச்சிகளை வழங்குவதில் அதிக ஆர்வமாய் இருக்கிறேன். அதிலும் முழு நேர பஜன் நிகழ்ச்சிகள் வழங்கும் போது என்னையும் அறியாமல் எனக்குள் ஒருவித சந்தோஷம் கிடைக்கிறது!'' என்கிறார்.

''கடந்த மார்ச் மாதம், உ. பி. அரசு ஏற்பாடு செய்திருந்த 'கங்கா மகோத்சவத்'தில் நான் பங்கேற்றேன். விழா கங்கைக் கரையில் நடைபெற்றது. மறுநாள் பத்திரிகைகளில், 'வாணி ஜெயராமின் இசையில் மயங்கிய கங்கையே நின்று, அவரது கான மழையைப் பருகி விட்டு, மீண்டும் தன் ஓட்டத்தைத் தொடர்ந்தது' என்று பாராட்டியிருந்தார்கள்! அதைப் படித்த போது நான் மிகவும் நெகிழ்ந்து போய் விட்டேன்!'' என்கிறார்.

''ஓய்வு நாட்களில் என்ன செய்வீர்கள்?''

''என்னுடைய உறவுக்காரர்கள் வீட்டுக் குழந்தைகள் நிறையப் பேர் வந்து விடுவார்கள். அவர்களுடன் விளையாடி, ஒன்றாய்ச் சேர்ந்து பாட்டுப் பாடி, படம் வரைந்து கொடுத்து, ஜாலியாய் பொழுதைக் கழிப்பேன். தவிர, எனக்குத் தோட்டக் கலையில் ஆர்வம் அதிகம்'' என்று சொல்லும் வணிஜெயராம் சமீப காலமாகத் தொடங்கியுள்ள இன்னொரு விஷயம், கவிதைகள் எழுதுவது.

மற்றபடி சினிமா உலகுக்கேயுரிய பாலிடிக்ஸிலெல்லாம் இவர் ஆர்வம் காட்டுவதில்லை. ''பாட்டு இருக்கும் போது பாலிடிக்ஸ் எதற்கு?'' என்கிறார்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**
அட்டை வண்ணப்படம் : **யோகா**

# இதோ ஒரு வேலை!

"**த**ண்டச் சோறு.''

- அண்ணன் காலையில் திட்டியது மன் சுக்குள் வலித்தது.

பட்டம் பெற்று ஒரு வருடம் ஓடி விட்டது.

கல்லூரி நாட்களின் இனிமை நெஞ்சி லிருந்து கரைந்து போய் ஒரு வித ஏக்க உணர்வு பரவி நின்றது.

வேலை தேடுவதே வேலையாய்ப் போன நிலையில், எதிர்காலத்தைப் பற்றிய கனவுகள் தீர்ந்துப் போகத் தொடங்கி விட்டன.

ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆசை இருக்கும் அளவுக்கு, எதைச் செய்வது என்ற தெளிவில்லாமல் புத்தி குழம்பி நின்றது.

இதெல்லாம் இன்று காலை வரைதான்.

அண்ணியின் எதிரே அண்ணன் திட்டி யதும் ரோஷம் பொத்துக் கொண்டு வர, பாதி டிபனில் எழுந்து வெளியேறி வந்தாகி விட்டது.

அம்மா திகைத்துப் போய் நின்ற வேளையில், தடுத்து நிறுத்தக் கூட அவ காசம் தராமல் வந்தாகிவிட்டது.

அண்ணன் திட்டியதில் கூட வருத்த மில்லை. அண்ணியின் எதிரே திட்டியதும், அண்ணி கிண்டலாய்ப் பார்த்ததும்தான் உசுப்பிவிட்டது.

அண்ணியை விடு. இப்போது நடக்க வேண்டியதைக் கவனி என்று இடித்தது மனம்.

காலை நேரப் பரபரப்பில் இருந்தது சாலை.

நான் அமர்ந்திருந்த பிள்ளையார் கோவி லைப் பார்த்து அவிச்சையாகக் கன்னத்தில் போட்டுக் கொண்டபடி விரைந்து கொண் டிருந்த மனிதர்களைப் பார்க்கப் பொறாமை யாய் இருந்தது.

எல்லோருக்கும் ஏதோ ஒரு வேலை இருக்கிறதே!

நான் இப்போது என்ன செய்யலாம்....?

மூட்டை தூக்கப் போகலாமா? பிச்சை எடுத்துப் பிழைக்கலாமா? தெருவில் குப்பை பொறுக்கலாமா?

சட்டென்று மனத்துள் பளிச்சிட்டது.

தெருவைச் சுத்தப்படுத்தி னால் என்ன?

முனிசிபாலிடி எட்டிக் கூடப் பார்க்காத காலனி எங்கள் புதுக் காலனி.

மொத்தம் எண்பது வீடுகள் இருக்கின்றன.

தெருவுக்கு இருபது வீடு களாக நாலே தெருக்கள் கொண் டது.

வீட்டைத் தூய்மையாக்கித் தெருவைக் குப்பையாக்கும் மனி தர்களைக் கொண்டது.

தினசரி ஒரு வேளை, தெருவைச் சுத்தம் செய்யலாம்.

வீட்டுக்கு ஐந்து ரூபாய் மாதம் கொடுத் தால் கூட மொத்த வருமானம் ரூபாய் நானூறு கிடைக்குமே!

என் சாப்பாட்டுச் செலவுக்கும், அப்ளி கேஷன் செலவுகளுக்கும் போதுமானதா யிற்றே இது.

பட்டப்படிப்பு முடித்தவன் தெருக் கூட்டப் போகிறாயா என்று ஒரு எண்ணம் கெக்கலித்தது.

படிப்புக்குத் தகுந்த வேலை கிடைக் காத போது என்ன செய்வது?

நான் என்பது யார்?

புத்தியும், உடம்பும் சேர்ந்தது தானே?

படிப்பினால் வந்த புத்திக்கு வேலை கிடைக்கும் வரை உடம்புக்கு உழைப்பைக் கொடுத்தால் என்ன தவறு?

மனது சமாதானமாயிற்று!

காலனி வாசிகளிடம் சொல்லிவிட்டு வேலையை ஆரம்பிக்கலாமா...?

வேலை செய்யத் தொடங்கி விட்டாலே பரவி விடுமே செய்தி. தனித்தனியாய்ப் பார்த்துச் சொல்வதைவிட, தானே விஷயம் தெரிந்து அவர்களாகவே கேட்பதுதான் நல்லது.

முடிவு செய்துவிட்டேன்.

முதலில் என் வீடு இருக்கும் தெரு விலிருந்து ஆரம்பிக்கத் தீர்மானித்தேன்.

பிள்ளையாருக்குத் தோப்புக்கரணம் போட்டுக் கும்பிட்டேன். விக்னேஸ்வரா, எந்த விக்னமும் இல்லாமல் உதவி செய் யப்பா!

பிள்ளையார் கோவில் ஓரத்தில் இருந்த விளக்குமாற்றை எடுத்துக் கொண்டேன்.

முதலில் தெருவைக் கூட்டி அங்கங்கு குப்பைகளைக் குவித்து வைத்துக் கொள் வோம்.

கிருஷ்ணா

பிறகு யாரிடமாவது பழைய பிளாஸ்டிக் பக்கெட் வாங்கி, குப்பையை அள்ளித் தெருமுனையிலே பெருக்கு உள்ள குப்பைத் தொட்டியில் கொட்டுவோம்.

ஆரம்பித்து விட்டேன் என் வேலையை.

யாரிடமும் கைகட்டிச் சேவகம் செய்யாமல், நல்ல நாள் பார்க்காமல் ஆரம்பித்து விட்டேன்.

தெருவில் ஓரிரண்டு பேர் முதலில் கவனித்தார்கள்.

தங்களுக்குள் குசுகுசுவென்று பேசிக் கொண்டார்கள்.

''என்னப்பா சமூக சேவையா?'' என்றார் எதிர் வீட்டு மணி.

''இல்லை சார், எனக்கு வேலை கிடைக்கடுக்க! வீட்டுக்கு அஞ்சு ரூபாய். மாசாமாசம் கொடுங்கன்னு கேட்கப் போறேன். தெரு சுத்தமாய் இருந்தால் நமக்குத்தானே நல்லது. வியாதி பரவாது பாருங்க. காத்தடிச்சா வீட்டுக்குள்ளே குப்பை பறக்காதில்லையா?''

நான் ஏதோ ஜோக்கடிப்பதாய் நினைத்து என் முகத்தைப் பார்த்தார்.

''நிஜமாவா?''

''ஆமாம் சார். எனக்கோ படிப்புக்கு ஏற்ற வேலை கிடைக்கலே. அதுவரைக்கும் தண்டச் சோறாக இருப்பானேன்?'' என்றதும் விருட்டென்று நகர்ந்தார்.

'போஸ்ட் மாஸ்டர் பிள்ளை தெருக் கூட்டறான்' என்று, அதற்குள் செய்தி பரவி, அவரவர் வீட்டு வாசலில் நின்று வேடிக்கை பார்க்க ஆரம்பித்தனர்.

அம்மாவும், அப்பாவும் அதற்குள் என்னைத் தேடி ஓடி வந்தனர்.

''என்னடா ஆச்சு உனக்கு? ஏன்டா இப்படி மானத்தை வாங்கறே?''

''என்ன அவமானம் இதுல? தண்டச் சோறா இருக்கறதை விட பொய் சொல்லாம, திருடாம யோக்கியமான வேலைதானே இது''

என்றேன் அமைதியாய்.

''ஏன்டா, உன் அண்ணன் ஏதோ கோபமாய்ப் பேசிட்டான்னா இப்படியா பண்றது? வாடா வீட்டுக்குப் போகலாம் முதல்ல....'' என்றார் அப்பா கெஞ்சலாய்.

''இல்லைப்பா. அண்ணன் பேசினதுல எனக்குக் கோபம் வந்தாலும் எனக்கு ஒரு வழி தெரிஞ்சுடுச்சே.''

''போதுன்டா. பேத்தாதே. நான் இது வரை உன்னை ஏதாவது திட்டியிருக்கேனா? வாடா பெரிசு பண்ணாம.....''

''அப்பா, நான் இப்ப கோபத்திலோ, ஆத்திரத்திலோ இதைச் செய்யலே.''

''பின்னே?''

''அவமானத்தினாலேதான் செய்யறேன். ரிடையர் ஆனபின்னும், லீவு வேகன்சியிலே நீங்க போஸ்டாபீஸ்ல வேலை



# அருள்வாக்கு



வார்த்தைகளை உபயோகிக்கும்போது, ஒரு சொல் கூட அதிகமாகக் கூடாது. அளவாக, கணக்காகப் பேச வேண்டும். அதனால் நமக்கும் சரி, நம் பேச்சைக் கேட்கிறவர்களுக்கும் சரி பொழுது மிச்சமாகும். வழவழவென்றும் பேசாமல், சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்று பழக்கிக் கொண்டாலே புத்தியில் ஒரு தீட்சண்யமும், வாக்கில் ஒரு பிரகாசமும் கூட உண்டாகும். சக்தியும் (energy) வீண் (waste) ஆகாமல் இருக்கும். எத்தனையோ சண்டை சாடிகளும் மிச்சமாகும். 'கொட்டி விடலாம்; வாரிவிட முடியுமா?' என்று பாமர ஜனங்கள் கூடக் கேட்கிறார்கள். திருவள்ளுவரும் எதைக் காக்காவிட்டாலும் நாக்கைக் கட்டுப்படுத்திக் காப்பாற்ற வேண்டும் என்கிறார். ஆனால் இப்போது லோகம் முழுக்க ஒரே பேச்சு யுகமாகத்தான் ஆகியிருக்கிறது. நியூஸ் பேப்பர்களெல்லாம் 'அவர் பிரசங்கம்', 'இவர் பிரசங்கம்' என்றுதான் போட்டு நிரப்புகின்றன. காரியத்தில் ஏதாவது நடக்கிறதா என்றால் ஸைபர்தான். அநேகமாக, காரியத்தில் நடக்கவில்லை என்பது தெரியாமலிருப்பதற்கே சண்டப் பிரசண்டமாகப் பேசி, ஏதோ பெரிதாகச் சாதித்துவிட்ட மாதிரி பிரமையை உண்டு பண்ணி வருகிறார்கள்.

ஒரு சமயத்தில் எந்தத் தொத்து வியாதி ரொம்பவும் உக்கிரமாகப் பரவியிருக்கிறதோ அதற்குத்தானே முக்கியமாக சிகிச்சை செய்ய வேண்டும்? இன்று பேச்சுத்தான் ரொம்ப உக்கிரமாகப் பரவியிருக்கிறது. நம் நீதி நூல்களில் 'மௌனம் கலகம் நாஸ்தி' என்றார்கள். பேச்சுக் குறைந்தால் சண்டையும் குறையும். - மேல்நாட்டில் கூட, 'பேச்சு வெள்ளி என்றால், மௌனம்தான் தங்கம் (Speech is silver; silence is golden)' என்கிறார்கள். - ஆத்ம சிரேயஸுக்கு ரொம்பவும் வற்புறுத்தப்பட்ட விஷயம் இது. 'மோனம் என்பது ஞான வரம்பு' என்றார்கள். அந்த வரம்புக்குப் போய், ஒரே மௌனமாயிருக்க நம்மால் முடியாவிட்டாலும், நாம் பேச்சை ரொம்பவும் குறைத்துக் கொள்ளப் பாடுபட வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

செய்யறீங்க. ஆஸ்த்துமா நோயாளியான நீங்களே இந்த வயசுல இப்படிக் கஷ்டப் பட்டுச் சம்பாதிக்கும் போது, நான் இப்படி வெட்டியா இருக்கறது அவமானமா இருக்குப்பா.''

''அதுக்காக இப்படி தெருக்கூட்டணுமா? அப்பாவுக்கு அவமானம் இல்லையா இது?'' என்று அம்மா இடையில் புகுந்தாள்.

''இது அவமானம் இல்லைம்மா. போஸ்ட்மாஸ்டர் பிள்ளை வேலைவெட்டி இல்லாம ஊர் சுத்தறான்னு பேர் எடுக்கறதை விட, இது பெட்டர் இல்லையா? படிச்சிருந்தாலும் கௌரவம் பார்க்காம எந்த வேலையும் இழிவில்லேன்னு செய்யறான் பாருன்னு கூடப் புகழலாமே.''

அம்மாவும், அப்பாவும் என் உறுதியைக் கண்டு திகைத்துப் போயினர்.

''அவன் சொல்றதும் ஒருவிதத்துல சரிதாண்டி'' என்று அப்பா இறங்கி வந்தார், என்னைப் புரிந்து கொண்டவிதமாய்.

அம்மாதான் மனசு சமாதானம் ஆகாமல் நின்றாள்.

நான் என் துப்புரவுத் தொழிலைத் தொடர்ந்தேன்.

**மு**தல் இரண்டு நாட்கள் பரபரப் பாய்ப் பேசப்பட்ட என் செயல் அடுத்த ஒரு வாரத்தில் எங்கள் காலனிவாசிகளுக்குப் பழகிப் போனது.

முதலில், கிறுக்குப்பயல் என்று என்னைக் கேலி செய்தவர்கள்; ஏதோ ஒரு நாள் கூத்து என்று நினைத்தவர்கள் என் பணி தொடர்வதைக் கண்டு கிண்டல் செய்வதை நிறுத்தி விட்டனர்.

அடுத்த இரண்டாவது மாதத்தில் ஒரு பிரைவேட் கம்பெனியிலிருந்து இண்டர் வியூ வந்தது.

காலையில் சீக்கிரமாகவே எழுந்து என் துப்புரவுப் பணியை முடித்துவிட்டுப் பத்து மணிக்கு அங்கு சென்றேன்.

''படிக்க, முடிக்க ஒரு வருஷத்துக்கும் மேலே ஆச்சே, இத்தனை நாள் என்ன பண்ணிக்கிட்டு இருந்தீங்க?'' என்றார் இண்டர்வியூ செய்பவர்.

''இத்தனை நாளா ஒண்ணும் செய்யலே சார். இரண்டு மாதமாய்த்தான் வீதி கூட்டுற வேலை செய்யறேன். மாதம் ஐந்து ரூபாய் கூலி. எண்பது வீடுகள். நானூறு ரூபாய்...'' என்று விவரித்தேன்.

''வாட்?'' என்று வியப்புடன் என் னைப் பார்த்தார்.

''செய்யும் தொழிலே தெய்வம். அதில் திறமைதான் சார் நமது செல்வம்'' என்றேன் அவர் வியப்புக்குப் பதிலாய்.

''சரி, இங்கே வேலை கொடுத்தால் என்ன செய்வாய்? அதை விட்டு விடு வாயா?'' என்றார்.

''நோ! கூலிக்கு வேலையா அதை இப்ப செஞ்சுக்கிட்டு இருக்கற நான், இந்த வேலை கிடைச்சதுன்னா சமூக சேவையா அதை நிச்சயம் தொடர்வேன். எங்க காலனியின் சுத்தம், சுகாதாரத்தின் முக்கியம் எனக்கு மட்டுமல்ல, காலனிவாசிகளுக் கும் இந்த நாட்களில் புரிஞ்சிடுச்சு. அவர்களின் உதவியுடன் நற்பணி இயக்க மாய் இந்த சேவையைத் தொடர்வேன்'' என்றேன் உறுதியாய்.

என் மெய்வருத்தக் கூலி வேலை, அடுத்த நாளிலிருந்து சமூக சேவையாய் மாறியது.



### யமகா ஓட்டும் மூன்று வயதுச் சிறுவன்

ரஞ்சுவிற்கு வயது மூன்றுதான் ஆகி றது. இவனுக்கு யமகா மோட்டார் சைக் கிள் ஓட்டுவது என்றால் திருநெல்வேலி அல்வா சாப்பிடுவது மாதிரிதான். கேரள மாநிலம் இரிஞ்சாலக்குடாவைச் சேர்ந்த சாய் என்பவரது மகன். தந்தை யமகா வில் புறப்பட்டால் இவன் முன்னால் ஏறி அமர்ந்து கொள்கிறான். தந்தை வண் டியை ஸ்டார்ட் செய்து கியர் போட்டு ஹேண்டில்பாரை ரஞ்சு கையில் கொடுத்து விடுகிறார்!

- எஸ். எஸ். மணி



''விலைவாசி உயர்வைப் பற்றி மக்களுக்கு என்ன தெரிவிக்க விரும்பு கிறீங்க?''

''எங்கள் கவலையை!''

- ஞா. ஞானமுத்து



**ம**த்தியப்பிரதேசத்தில் உள்ள பைராக் என்ற ஊரில் காந்தித் தாத்தா சிலைக்குத் தத்ரூபமாக இருப்பதற்காக மூக்குக் கண்ணாடி அணிவிப்பது வழக்கம். இது வரை, நாற்பத்தொன்பது மூக்குக் கண்ணாடி கள், ஒன்று திருட்டுப் போனால் மற்றொன்று என்று அணிவித்தனர். நாற்பத்தொன்பது வழக்குகளைப் போலீசார் பதிவு செய்து வைத்திருக்கிறார்கள்.

ஐம்பதாவது மூக்குக் கண்ணாடி அணி விக்க இப்போது முயற்சி நடக்கிறது!

- எக்ஸ்பிரஸிலிருந்து

தகவல் : சேலம் சக்திக் கொடி

# சிவகாமியின் சபதம்

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## அகக் கண்காட்சி

திகம்பர சமணரால் வழிகாட்டப் பெற்று, நெடுமாறன் குகைக்குள்ளே நுழைந்த போது, உள்ளிருந்து வந்த தூபப் புகையின் வாசனை அவனுடைய தலையை கிறுகிறுக்கச் செய்தது. மெதுவாகச் சமாளித்துக் கொண்டு உள்ளே சென்றான். சிறிது தூரம் சென்றதும் தென்பட்ட விசாலமான குகை மண்டபத்தில் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான். தீப ஸ்தம்பத்தின் மீதிருந்த பெரிய அகல் விளக்கின் தீபம் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஒரு பக்கத்தில் வைத்திருந்த பாத்திரத்திலிருந்து தூபப் புகை வந்து கொண்டிருந்தது. தீபத்தின் வெளிச்சமும் தூபத்தின் புகையும் சேர்ந்து அங்கே தோன்றிய காட்சியை ஏதோ ஒரு மாயாலோகத்தின் கனவுக் காட்சியாகத் தோன்றும்படி செய்தது. நெடுமாறன் சற்று உற்றுப் பார்த்த பிறகு காட்சி சிறிது தெளிவடைந்து காணப்பட்டது. பத்துப் பன்னிரண்டு திகம்பர சமணர் வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஏதோ ஒரு மந்திரத்தை ஒரே குரலில் ஒரே விதமாக ஜபித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் உடுக்கை போன்ற ஒரு வாத்தியத்தைக் கையிலே வைத்து முழக்கிக் கொண்டிருந்தார். மற்றொருவர் பல தந்திகள் உள்ள ஒரு முழு நீளமுள்ள வீணையைக் கையில் வைத்துக் கொண்டு அதன் நரம்புகளை விரலினால் தட்டிக் கொண்டிருந்தார். இந்த இரண்டு நாதங்களும் சேர்ந்துதான் 'தரிரிம்' 'தரிரிம்' என்ற ஒலியைக் கிளப்பி நெடுமாறன் உடம்பிலுள்ள நரம்புகளையெல்லாம் புடைத்தெழச் செய்தன.

வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்த சமணர்களுக்கு நடுவில் ஏறக்குறையப் பதினாறு வயதுள்ள ஒரு சிறுவன் காணப்பட்டான். மேற்படி மந்திர உச்சாரணத்துக்கும் வாத்தியங்களின் ஒலிக்கும் இசைய, அவனுடைய தேகம் இலேசாக ஆடிக் கொண்டிருந்தது. அவனுடைய கண்களோ முக்கால் பங்கு மூடியிருந்தன. கண்கள் திறந்திருந்த அளவில் வெள்ளை விழி மட்டும் தெரிந்தபடியால் முகம் பயங்கரத் தோற்றத்தை அளித்தது.

நெடுமாறனை அழைத்து வந்த சமண முனிவர் அவனை நோக்கிச் சமிக்ஞை செய்து, எதுவும் பேச வேண்டாமென்றும், சப்தம் செய்யாமல் உட்கார வேண்டுமென்றும் தெரிவித்தார்.

நெடுமாறன் அவ்விதமே சப்தம் செய்யாமல் உட்கார்ந்திருந்தான்.

மந்திர உச்சாரணம், வாத்திய முழக்கம் ஆகியவற்றின் வேகம் வரவர அதிகரித்து வந்தது. திகம்பர மண்டலத்துக்கு மத்தியிலிருந்த சிறுவனுடைய உடம்பின் ஆட்டமும் விரைவாகிக் கொண்டு வந்தது.

திடீரென்று மந்திர உச்சாரணமும், வாத்திய முழக்கமும் நின்றன.

சிறுவன் 'வீல்' என்று சப்தமிட்டுக் கொண்டு தரையிலே சாய்ந்தான்.

சற்று நேரம் அந்தக் குகை மண்டபத்தில் ஒரு பயங்கர நிசப்தம் குடிகொண்டிருந்தது.

கட்டையைப் போல் கீழே கிடந்த சிறுவனின் கண்ணிமைகளும் உதடுகளும் இலேசாகத் துடித்தன.

கையில் வீணை வைத்துக் கொண்டிருந்த சமணர் அதன் ஒற்றை நரம்பை இலேசாகத் தட்டி விட்டு, "தம்பி! என் குரல் உனக்குக் கேட்கிறதா?" என்று வினவினார்.

"கேட்கிறது, சுவாமி!" என்று அந்தச் சிறுவனின் உதடுகள் முணுமுணுத்தன.

"அப்படியானால் நான் கேட்கிற கேள்விகளுக்கு விடை சொல், சற்று முன்னால் நீ இருந்த இடத்துக்கும் இப்போதுள்ள இடத்துக்கும் ஏதேனும் வித்தியாசம் தெரிகிறதா?"

"சற்று முன்னால் நான்மலைக் குகையில் தரையில் கிடந்தேன். இப்போது ஆகாச வெளியில் மிதந்து கொண்டிருக்கிறேன்.

ஆகாச வெளியில் நினைத்த இடத்துக்கெல்லாம் போகக் கூடியவனாயிருக்கிறேன்.''

''நீ மிதக்கும் இடத்தில் உன்னைச் சுற்றி என்ன பார்க்கிறாய்?''

''என்னைச் சுற்றிலும் திரள் திரளாகப் புகை மண்டலங்கள் காணப்படுகின்றன; அந்தப் புகை மண்டலங்களுக்குள்ளே எத்தனை எத்தனையோ உருவங்கள் மங்கலாகக் காணப்படுகின்றன. அவை மறைந்து தோன்றிக் கொண்டிருக்கின்றன.''

''தம்பி! நீ நிற்கும் இடத்திலேயே நிற்க வேண்டுமா? முன்னாலும் பின்னாலும் உன்னால் போகக்கூடுமா?''

''முன்னாலும் பின்னாலும் மேலேயும் கீழேயும் நானா திசைகளிலும் நினைத்தபடியெல்லாம் நான் போகக் கூடியவனாயிருக்கிறேன்.''

சிறுவனிடம் மேற்படி கேள்விகளைக் கேட்ட சமணர், நெடுமாறனை நோக்கி, ''பாண்டிய குமாரா! இந்தப் பிள்ளை இப்போது ரிஷப தேவரின் அருள் மகிமையில் அகக்காட்சி பெற்றிருக்கிறான். இதற்கு முன் இருபதாயிரம் ஆண்டுக் காலத்தில் நடந்தவைகளையும், இனிமேல் இருபதினாயிரம் ஆண்டுக் காலத்தில் நடக்கப் போகும் சம்பவங்களையும் இவனால் நேருக்கு நேர் கண்டு சொல்ல முடியும்! தங்களுக்கு ஏதாவது தெரிந்து கொள்ள வேண்டுமா?''

நெடுமாறன் சற்றுத் தயங்கினான். 'வருங்காலத்தை மறைத்துக் கொண்டிருக்கும் மேகத் திரையை விலக்கிக் கொண்டு எதிர்காலச் சம்பவங்களை, தான் பார்க்க வேண்டியது அவசியந்தானா? அப்படிப் பார்ப்பதனால் ஏதேனும் விபரீதம் ஏற்படுமோ? ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் அந்த மந்திரக் •குகையிலிருந்து உடனே எழுந்து போய் விடலாமா?'

மனத்தில் இப்படி நெடுமாறன் எண்ணினானே தவிர, அவனை அங்கிருந்து எழுந்து போக விடாமல், ஏதோ ஒரு சக்தி தடுத்து அவனை அங்கேயே பலமாக இருத்திக் கொண்டிருந்தது.

''ஆம், அடிகளே! வாதாபி யுத்த முடிவைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்ற வார்த்தைகள் நெடுமாறன் வாயிலிருந்து தாமே வெளிவந்தன.

உடனே, சமணர் தரையில் கிடந்த சிறுவனை நோக்கி, ''தம்பி! கொஞ்சம் வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்து அங்கே என்ன பார்க்கிறாய் என்று சொல்லு!'' என்றார்.

''ஆகட்டும், சுவாமி! இதோ வடதிசை நோக்கிப் போகிறேன்!'' என்றான் சிறுவன்.

சற்றுப் பொறுத்து, ''ஆ! என்ன பயங்கரம்!'' என்றான்.

''தம்பி! அங்கே என்ன பயங்கரமான காட்சியை நீ பார்க்கிறாய்?'' என்று சமணர் கேட்டார்.

''ஆகா! மிகப் பயங்கரமான யுத்தம் நடக்கிறது. கணக்கிலடங்காத வீரர்கள் வாட்களாலும் வேல்களாலும் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டு செத்து விழுகிறார்கள். எங்கே பார்த்தாலும் இரத்த வெள்ளம் ஆறாக ஓடுகிறது. பெரிய பெரிய பிரம்மாண்டமான யானைகள் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு ஒன்றையொன்று தாக்குகின்றன. யுத்தம் ஒரு பெரிய பிரம்மாண்டமான கோட்டை மதிலுக்குப் பக்கத்தில் நடக்கிறது. கோட்டையின் பிரதான வாசலில் ஒரு பெரிய கொடி பறக்கிறது. அந்தக் கொடியில் வராகத்தின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆகா! கோட்டைக் கதவு இதோ திறக்கிறது! கணக்கற்ற வீரர்கள் கோட்டைக்குள்ளேயிருந்து வெளியே வருகிறார்கள். ஆ! யுத்தம் இன்னும் கோரமாக நடக்கிறது. சாவுக்குக் கணக்கேயில்லை, கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பிணக்காடு. அம்மம்மா! பார்க்கவே முடியவில்லை!''

சிறுவனுடைய கண்ணிமைகள் அப்போது இலேசாகத் துடித்ததைப் பார்த்த சமண குரு, ''தம்பி! பயப்படாதே! உனக்கு ஒன்றும் நேராது. இன்னும் சிறிது உற்றுப் பார். போர்க்களம் முழுவதும் பார்த்து, மிகவும் நெருக்கமான சண்டை எங்கே நடக்கிறதென்று கவனி!'' என்றார்.

''ஆம், ஆம்! அதோ ஓரிடத்தில் பிரமாதமான கைகலந்த சண்டை நடக்கிறது. குதிரை மேல் ஏறிய வீரன் ஒருவன் இரண்டு கைகளிலும் இரண்டு வாட்கள் ஏந்திப் பயங்கரப் போர் புரிகிறான். அவனைச் சுற்றிலும் எதிரிகள் சூழ்ந்து கொண்டு தாக்குகிறார்கள். அவன் தன்னந்தனியாக நின்று அவ்வளவு பேரையும் திருப்பித் தாக்குகிறான். அவனுடைய கை வாட்கள் அடிக்கடி மின்னலைப் போல் ஜொலிக்கின்றன. ஒவ்வொரு வாள் வீச்சுக்கும் ஒரு தலை உருளுகிறது. ஆகா! இதோ அந்த வீரனுக்குத் துணையாக இன்னும் சில வீரர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு நடுவில் மீனக்கொடி பறக்கிறது. 'நெடுமாற பாண்டியர் வாழ்க! வாதாபிப் புலிகேசி வீழ்க!' என்று அவர்கள் கர்ஜித்துக் கொண்டு எதிரிகள் மீது பாய்கிறார்கள்.''

இப்படி அந்தச் சிறுவன் சொன்னபோது, இதுவரை சிறிது அலட்சிய பாவத்துடனேயே கேட்டுக் கொண்டு வந்த நெடுமாறன் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். மேலே என்ன நடக்கப் போகிறது என்று

அமரர் கல்கி



தெரிந்து கொள்வதில் அவனுக்கு அப்போது அளவில்லாத பரபரப்பு உண்டாயிற்று.

மறுபடியும் சிறிது நேரம் சிறுவன் பேசாதிருந்தான். சமண குரு மீண்டும் அவனைத் தூண்டினார். மேலே என்ன நடக்கிறது என்று நன்றாகப் பார்த்துக் கூறும்படி ஆக்ஞாபித்தார்.

''ஆகா! சண்டை முடிந்து விட்டது. எதிரிகள் எல்லாரும் செத்து விழுந்து விட்டார்கள். வெற்றியடைந்த வீரர்கள் அந்த அலகாய சூரனைச் சூழ்ந்து கொண்டு, 'மீன் கொடி வாழ்க! நெடுமாற பாண்டியர் நீடூழி வாழ்க!' என்று கோஷிக்கிறார்கள். ஆகா! அவர்களுடைய கோஷமும் ஜயபேரிகைகளின் முழக்கமும் சேர்ந்து காது செவிடுபடச் செய்கின்றன.''

''அதோ இன்னொரு வீரர் கும்பல் வருகிறது. அந்தக் கும்பலின் நடுவில் ஒரு ரதம் காணப்படுகிறது. ரதத்தின் மேல் ரிஷபக் கொடி பறக்கிறது. ரதத்தில் கம்பீர வடிவமுள்ள ஒருவர் வீற்றிருக்கிறார். அவருடைய முகத்தில் குரோதம் கொதித்துக் கொண்டிருக்கிறது. இந்த இரதத்தைச் சூழ்ந்து வரும் வீரர்கள் 'மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க! என்று கோஷம்



செய்கிறார்கள். ஆனால், அவர்களுடைய கோஷத்தில் அவ்வளவு சக்தி இல்லை. இரண்டு கூட்டமும் சந்திக்கிறது. ரதத்தில் வந்தவரும் குதிரை மேலிருந்தவரும் ஒருவரையொருவர் பார்க்கிறார்கள். இரண்டு பேரும் கீழே இறங்குகிறார்கள். சமீபத்தில் வருகிறார்கள். மீனக்கொடிக்குரிய வீரர், ரிஷபக் கொடிக்கு உரியவரைப் பார்த்து, 'மாமல்லரே! பகைவர்கள் ஒழிந்தார்கள்; புலிகேசி இறந்தான்; வாதாபிக் கோட்டை நம் வசமாகி விட்டது. இனிமேல் தங்கள் காரியம். நான் போக விடை கொடுங்கள்!' என்று கேட்கிறார். ஐயோ! ரிஷபக் கொடியாரின் முகத்தில் குரோதம் தாண்டவமாடுகிறது. அவர், 'அடே பாண்டியப் பதரே! எனக்கு வர வேண்டிய புகழையெல்லாம் நீ கொண்டு போய் விட்டாயல்லவா?'' என்று சொல்லிக் கொண்டே உடைவாளை உருவுகிறார். மீனக் கொடியார், 'வேண்டாம் சக்கரவர்த்தி! வேண்டாம்! நமக்குள் எதற்காகச் சண்டை?' என்கிறார். ரிஷபக் கொடியார் அதைக் கேட்காமல் உடைவாளை வீசுகிறார், ஐயையோ!''

கேட்டவர்களின் ரோமம் சிலிர்க்கச் செய்த 'வீல்' சப்தத்துடன் இத்தனை நேரமும் தரையில் படுத்துக் கிடந்த சிறுவன் எழுந்து உட்கார்ந்தான். பீதியும் வெருட்சியும் நிறைந்த கண்களை அகலமாகத் திறந்து சுற்றிலும் பார்த்துத் திருதிருவென்று விழித்தான்.

நெடுமாற பாண்டியன் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. சமண முனிவரைப் பார்த்து, ''அப்புறம் நடந்ததைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? முக்கியமான தருணத்தில் எழுந்து விட்டானே?'' என்றான்.

''இளவரசே! இன்றைக்கு இவ்வளவுதான். மறுபடி இன்றிரவு இவனை அகக்காட்சி காணும்படி செய்ய முடியாது. பிறகு நடந்ததைத் தெரிந்து கொள்ள விரும்பினால் நாளைக்குத் தாங்கள் திரும்பவும் இவ்விடத்துக்கு வந்தாக வேண்டும்!'' என்றார்.

## பதினான்காம் அத்தியாயம்
# படை கிளம்பல்

மறுநாள் விஜயதசமி அன்று காலையில் வழக்கம் போல் கீழ்த்திசையில் உதயமான சூரியன், காஞ்சி மாநகரம் அன்றவித்த அசாதாரணக் காட்சியைக் கண்டு சற்றுத் திகைத்துப் போய் நின்ற இடத்திலேயே நின்றதாகக் காணப்பட்டது.

பூர்விகப் பெருமை வாய்ந்த பல்லவ அரண்மனை வாசலில் நின்று மாமல்ல சக்கரவர்த்தி யாத்ராதானம், கிரகப் ப்ரீதி ஆகிய சடங்குகளைச் செய்து விட்டு, குல குரு ருத்ராச்சாரியார் முதலிய பெரியோர்களின் ஆசிபெற்று, தாயார் புவனமகாதேவியிடமும் பட்டமகிஷி வானமாதேவியிடமும் விடைபெற்றுக் கொண்டு பட்டத்துப் போர் யானையின் மீது ஏறிப் போர் முனைக்குப் புறப்பட்டார். அப்போது காஞ்சி நகரத்தின் மாட மாளிகைகளெல்லாம்

அதிரும்படியாகவும், மண்டபங்களிலேயெல்லாம் எதிரொலி கிளம்பும்படியாகவும் அநேகம் போர் முரசுகளும் எக்காளங்களும் ஆர்த்து முழங்கின.

சக்கரவர்த்தி ஏறிய பட்டத்து யானைக்கு முன்னாலும் பின்னாலும் அணிஅணியாக நின்ற யானைகளும் குதிரைகளும் ரதங்களும் ஏக காலத்தில் நகரத் தொடங்கிக் காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசலை நோக்கிச் செல்லத் தொடங்கின.

இந்த ஊர்வலம் காஞ்சியின் இராஜ வீதிகளின் வழியாகச் சென்ற போது இருபுறத்திலும் இருந்த மாளிகை மேல்மாடங்களிலிருந்து பூரண சந்திரனையும் பொன்னிறத் தாமரையையும் ஒத்த முகங்களையுடைய பெண்மணிகள் பல வகை நறுமலர்களையும் மஞ்சள் கலந்த அட்சதையையும் சக்கரவர்த்தியின் மீது தூவி, 'ஜய விஜயீபவ!' என்று மங்கல வாழ்த்துக் கூறினார்கள்.

இப்படி நகர மாந்தரால் குதூகலமாக வழி அனுப்பப்பட்ட சக்கரவர்த்தியின் போர்க்கோல ஊர்வலம் ஒரு முகூர்த்த காலத்தில் வடக்குக் கோட்டை வாசலை அடைந்தது. நன்றாகத் திறந்திருந்த கோட்டை வாசல் வழியாகப் பார்த்த போது, கோட்டைக்கு வெளியிலே சற்றுத் தூரத்தில் ஆரம்பித்துக் கண்ணுக்கெட்டிய வரை பரவிய ஒரு பெரிய சேனா சமுத்திரம் காணப்பட்டது. அந்த சேனா சமுத்திரத்தின் இடையிடையே கணக்கில்லாத கொடிகள் காற்றிலே பறந்த காட்சியானது, காற்று பலமாய் அடிக்கும் போது சமுத்திரத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வெண்ணுரை எறிந்து பாயும் அலைகளை ஒத்திருந்தது.

வடக்குக் கோட்டை வாசலில், அகழிக்கு அப்புறத்தில் நின்று மாமல்ல சக்கரவர்த்தி கடைசியாக விடைபெற்றுக் கொண்டது, மானவன்மரிடமும் தம் அருமைக் குழந்தைகள் இருவரிடமுந்தான்.

மகேந்திரனையும் குந்தவியையும் தமது இரு கரங்களாலும் வாரி அணைத்துத் தழுவிக் கொண்ட போது, 'இந்தக் குழந்தைகளை இனிமேல் எப்போதாவது காணப் போகிறோமோ, இல்லையோ?' என்ற எண்ணம் தோன்றவும், மாமல்லரின் கண்கள் கலங்கிக் கண்ணீர் ததும்பின. குழந்தைகளைக் கீழே இறக்கி விட்டு மானவன்மரைப் பார்த்து மாமல்லர் சொன்னார் : ''என் அருமை நண்பரே! இந்தக் குழந்தைகளையும் இவர்களுடைய தாயாரையும் பல்லவ இராஜ்யத்தையும் உம்மை நம்பித்தான் ஒப்படைத்து விட்டுப் போகிறேன். நீர்தான் இவர்களைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து நான் திரும்பி வரும் போது ஒப்படைக்க வேண்டும். மானவன்மரே! பரஞ்சோதியின் அபிப்பிராயப்படி திருக்கழுக்குன்றத்தில் திரண்டிருந்த படையில் ஒரு பகுதியை நிறுத்தி விட்டுப் போகிறேன். பாண்டிய குமாரனாலோ, அவனுடைய படையினாலோ காஞ்சிக்கு அபாயம் நேர்வதாயிருந்தால், நம் படையைப் பயன்படுத்தத் தயங்க வேண்டாம்.''

''ஆகட்டும், பிரபு! தங்களுக்கு இவ்விடத்துக் கவலை சிறிதும் வேண்டாம்!'' என்றான் மானவன்மன்.

''ரொம்ப சந்தோஷம், கடைசி நேரத்தில் எங்கே நீங்களும் வர வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறீர்களோ என்று பயந்து கொண்டிருந்தேன். இதுதான் உண்மையான சிநேகத்துக்கு அழகு!'' என்று உள்ளம் உவந்து கூறினார் மாமல்லர்.

அப்போது மகேந்திரன் ஆயிரத்தோராவது தடவையாக, ''அப்பா! நானும் வாதாபிப் போருக்கு வருகிறேன். என்னையும் அழைத்துப் போங்கள்!'' என்றான்.

புதல்வனைப் பார்த்து மாமல்லர், ''மகேந்திரா! இந்த வாதாபி யுத்தம் கிடக்கட்டும். இதைவிடப் பெரிய இலங்கை யுத்தம் வரப் போகிறது. உன் மாமாவின் இராஜ்யத்தை அபகரித்துக் கொண்டவனைப் போரில் கொன்று இராஜ்யத்தைத் திரும்பப் பெற வேண்டும். அந்த யுத்தத்துக்கு நீ போகலாம்!'' என்றார்.

இவ்விதம் கூறி விட்டு மாமல்லர் சட்டென்று குழந்தைகளைப் பிரிந்து சென்று போர் யானை மீது ஏறிக் கொண்டார். அவ்வளவுதான்! அந்தப் பெரிய பிரம்மாண்டமான சைனியம் சமுத்திரமே இடம் பெயர்ந்து செல்வது போல் மெதுவாகச் செல்லத் தொடங்கியது. அவ்வளவு பெரிய சைனியம் ஏககாலத்தில் நகரும் போது கிளம்பிய புழுதிப் படலமானது வானத்தையும் பூமியையும் ஒருங்கே மறைத்தது. அந்தப் புழுதிப் படலத்தில் பல்லவ சைனியம் அடியோடு மறைந்து போகும் வரையில் மானவன்மரும், மகேந்திரனும், குந்தவியும் கோட்டை வாசலில் நின்று கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)

"**வா**ங்க அண்ணா, வாங்க."

ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு அமெரிக்காவிலிருந்து வந்திருக்கும் எனக்கு வரவேற்பு பலமாகவே இருந்ததில் வியப்பில்லை. வரவேற்றது என் இரண்டாம் தங்கை சங்கரிதான். விமான நிலையத்துக்குத் தன் இரண்டு குழந்தைகளுடன் வந்திருந்தாள்.

"சௌக்யமா சங்கரி? ஜகன் எப்படி இருக்கார்?" என்று அவளுடைய கணவனைப் பற்றிக் கேட்டேன்.

"எல்லாம் உங்க புண்ணியம்தானே, அண்ணா... எல்லோரும் சௌக்யம்தான். அவருக்கு ஆபீசில் முக்கியமான வேலை. ஏர்போர்ட்டுக்கு வரமுடியலே" என்றாள்.

சங்கரியே காரை ஓட்டினாள். ஆறு வருசத்துக்கு முன் நான் பார்த்த என் குட்டித் தங்கை சங்கரியா இது? கல்யாணமாகி, இரண்டு குழந்தைகளுக்குத் தாயாகி, குடும்பப் பொறுப்பை ஏற்று...

"வாங்க அண்ணா, வாங்க..."

"உங்க ஃப்ளைட் எல்லாம் சௌகரியமா இருந்திச்சா?"

"அண்ணி, பசங்க எல்லாரும் எப்படி இருக்காங்க? அவங்களையும் கூட்டி வந்திருக்கலாமே..." என்று வரவேற்பும், கேள்விகளும் தொடர்ந்தன.

நிதானமாகப் பதில் சொன்னேன். குழந்தைகளைக் கொஞ்சிவிட்டு, பரிசுகளை வரிசையாகத் தந்தேன். ஒவ்வொன்றும் குதித்துக் கொண்டு தன்னுடைய புதிய பொம்மையுடன் விளையாட ஓடின.

வீட்டில் குதூகலம்தான்.

மாலதி, சங்கரி, மூர்த்தி என்று மாறி மாறிப் பேசினார்கள். பேச்சுக்குப் பேச்சு, "அண்ணாதான் எல்லாமே... அண்ணா இல்லேன்னா நாம இன்னிக்கி இப்படி இருக்க முடியுமா....' என்ற ஒரே கருத்து என் மீது அவர்கள் வைத்திருந்த மதிப்பைக் காட்டியது.

# அப்பா ஒரு புதிர்

மாற்றங்கள்.... மாற்றங்கள். இன்னும் என்னென்ன மாற்றங்களோ?

சங்கரிக்குச் சென்னையில் வசதியான வீடு. எனக்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு வசதிகளையும் சங்கரி செய்ய ஆசைப்பட்டு, அவர்களுடனேயே தங்கும்படி எனக்கு எழுதியிருந்தாள். ஏற்றுக் கொண்டேன்.

"அண்ணா... உனக்கு அமெரிக்காவுலே இருக்கிற வசதியிலே கால்பங்கு கூட இங்கே இருக்காது.... முடிஞ்சவரைக்கும் செய்யறோம். எங்களோடயே தங்கணும்" என்று வீட்டுக்குப் போவதற்குள் பத்துமுறை சொல்லியிருப்பாள்.

"எப்பவோ சரின்னு சொல்லிட்டேனே" என்று நானும் பத்து முறை ஒப்புக் கொண்டேன்.

**வீ**ட்டில் எனக்குப் பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. என் முதல் தங்கை மாலதியும், தம்பி மூர்த்தியும் அவரவர் குடும்பத்துடன் வெளியூரிலிருந்து வந்திருந்தனர். எல்லாம் சங்கரியின் முன் ஏற்பாடாகத்தான் இருக்க வேண்டும்.






இதுவரைக்கும் அதிகமாகப் பேசாத நான் குறுக்கிட்டேன். ''அப்பா எங்கே?''

என் கேள்வியை யாரும் எதிர் பார்க்கவில்லையோ? திடீரென்று அறையில் அமைதி ஏற்பட்டது. மாலதி சங்கரியைப் பார்க்க, அவள் மூர்த்தியைப் பார்த்தாள். மூர்த்தி எனக்குப் பதில் சொல்ல வேண்டிய நிலை வந்தது.

''அப்பா சாயங்காலம் வருவார்.''

''சாயங்காலமா? ஏன்?'' என்றேன்.

''ஆ ம ா ம்... சங்கரியின் புருஷன் வேலையிலிருந்து திரும்பும்போது அப்பாவை அழைச்சிக்கிட்டு வருவார்'' என்றான் மூர்த்தி.

''அப்பா உங்க மூணுபேர்ல யாரு கூடவாவது இருப்பார்னு நினைச்சேன். உங்களோட இல்லையா?'' எனக்கு அதிர்ச்சி, வருத்தம், கோபம் எல்லாம் ஒரே சமயத்தில் உண்டாக என் குரல் சிறிது கடுமையானது.

''அப்பா தனியாத்தான் இருக்கார்.'' மூர்த்திதான் தயக்கத்துடன் பேசினான்.

இத்தனை நேரம் சூழ்ந்திருந்த குதூகலம் பட்டென்று பறந்து, இறுக்கம் பரவ ஆரம்பித்தது. அப்பாவின் விஷயத்தில் என் தம்பி தங்கைகள் ஏன் இப்படி நடந்து கொள்கிறார்கள்? எனக்கு இது பெரிய புதிராகத்தான் இருந்தது. இதற்கு ஒரு பதில் வேண்டும். அப்பா எங்கே இருக்கிறார் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்.

''அண்ணா... நீங்க ரொம்பக் களைப்பா இருப்பீங்க. குளிச்சிட்டு வந்தீங்கன்னா சாப்பிடலாம். அப்பாவைப் பத்தி அப்புறமாப் பேசலாமே...'' என்று மாலதி வழக்கமான உபசரிப்பைச் செய்து, பேச்சை மாற்றப் பார்த்தாள்.

''நான் தயாரானதும் நானே போய் அப்பாவை இங்கே கூட்டிட்டு வரப் போறேன். அப்பா இங்கே வர்றதுலே உனக்கு ஏதாவது 'அப்ஜெக்ஷன்' இருக்குதா சங்கரி?'' என்று நேரடியாகவே கேட்டு விட்டேன்.

''இருந்தா நான் அவர்கிட்ட சொல்லி அப்பாவை அழைச்சிக்கிட்டு வர ஏற்பாடு செஞ்சிருப்பேனா அண்ணா?'' என்றாள் சங்கரி.

''ஜகனுக்குப் போன் பண்ணிடு. அவர் நேரா வீட்டுக்கு வந்துடட்டும். நான் அப்பாவை....'' என்று நான் முடிக்குமுன், மூர்த்தி முந்திக்கொண்டான்.

''அண்ணா.... நீங்க கொஞ்சம் ரெஸ்ட் எடுங்க. நானே போய் வர்றேன்'' என்று புறப்பட்டான்.

மொத்தத்தில் அப்பா இருக்குமிடம் இவர்களுக்குத் தெரிந்தே ஏற்பாடாகியிருந்தது. அப்பா ஏன் இவர்களில் ஒருவருடன் தங்கியிருக்கவில்லை?

அப்பாவும் மூர்த்தியும் வர நேரமாகவில்லை. கைத்தடியை ஊன்றியபடி அப்பா படியேறினார். அவரைக் கைத்தாங்கலாய்

''ஹலோ... ஒரு பிரம்மாண்டமான சரித்திரக் கதை வேணும்னு கேட்டிருந்தீங்கல்லே...!''

''ஆமாம்!''

''கதை தயார். கிரேன் அனுப்பி எடுத்துட்டுப் போகலாம் சார்!''

- ஏ. ஞானமுத்து

நான் உள்ளே அழைத்து வந்தேன். அவர் உட்கார்ந்ததும், அவர் காலைத் தொட்டு வணங்கினேன்.

''நீ நல்லா இருக்கணும்'' என்று எப்போதும் போல் அப்பா என்னை வாழ்த்தினார்.

''எப்படி இருக்கீங்க அப்பா?'' என்று பொதுவாக விசாரித்தேன்.

''எல்லாம் உன் புண்ணியத்துலே நல்லா இருக்கேண்டா.'' பழுப்பு நிற பிரேம் போட்ட கண்ணாடி வழியாகத் தெரிந்த அவர் பார்வையில் நீர்த்திரை.

''என்னப்பா இது? பெரிய வார்த்தையெல்லாம் பேசறீங்க....'' என்றேன் மெல்ல.

அதற்குள் அப்பாவுக்குச் சாப்பாடு போட எல்லாம் தயாராகி, மாலதியும் சங்கரியும் சுறுசுறுப்பாக இயங்கினார்கள். மூர்த்தி குழந்தைகளை ஒருமுறை அடக்கி விட்டு வந்தான். வெளியே இரைச்சல் குறைந்தது. என் உள்ளே குமைச்சல் கூடியது. அப்பா மேலே பேசினார்.

''உனக்கு இதெல்லாம் எதுக்குடா... அவசியமும் இல்லை. நீ அமெரிக்காவிலே நிம்மதியாய் இருக்கறவன்'' என்றார்.

என் இதயத்தை ஊசியால் குத்தியது போல இருந்தது. நான் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவனில்லையா! படிக்கப் போனவனுக்குப் பணம், வாழ்க்கை வசதி இவை கிடைக்கவே அமெரிக்காவிலேயே நான் தங்கிவிட்டது உண்மைதான். அதற்காகக் குடும்பத்திலிருந்து ஒதுக்கப் பட்டேனா? தம்பி, தங்கைகள் எனக்குப் புகழ்மாலையாகப் போட, அப்பா இப்படிப் பேசுகிறாரே... குழம்பினேன்.

''மனசைப் போட்டுக் குழப்பிக்காதேடா... நீ ஆறு வருசத்துக்கப்புறம் வந்திருக்கே... எனக்கு ரொம்ப ரொம்ப சந்தோசம், திருப்தி எல்லாம். ஏதோ வந்திருக்கே. ஒரு மாசம் இருப்பியா? எல்லாரோடையும் சந்தோசமா இருந்துட்டுப் போவியா..... இந்தப் பிரச்னையெல்லாம் உனக்கு எதுக்கு?'' என்று நிதானமாய்ப் பேசினார் அப்பா.

''எந்தப் பிரச்னை அப்பா?'' கேட்டது மாலதிதான்.

''சாப்பாடெல்லாம் நல்லா இருக்கும்மா... இப்ப எதுக்கும்மா... அப்புறம் பேசலாமே.''

''நீங்கதானே அப்பா ஆரம்பிச்சீங்க'' என்று சங்கரியும் மாலதியுடன் சேர்ந்து கொண்டாள்.

''உங்க் மனசிலே இருக்கிறதைச் சொல்லிடுங்க அப்பா. அண்ணனும் தெரிஞ்சுக்கட்டும். எங்களுக்கு அண்ணாதானே எல்லாம்'' என்றான் மூர்த்தியும்.

''அவனுக்கு ஏண்டா இதெல்லாம்? அவன்தான் செய்ய வேண்டியதெல்லாம் ஒழுங்காச் செஞ்சிட்டானே, இன்னும் செய்யறானே. நிம்மதியாய் இருக்கட்டுமே'' என்று சொன்னதையே திரும்பச் சொன்னார் அப்பா.

''நாங்களும் இதைத்தானே சொல்றோம். அண்ணாதான் எல்லாத்தையுமே செஞ்சார்.. சந்தேகம் என்ன?'' மாலதியின் குரலில் சூடேறியது.

''அண்ணா இல்லேன்னா எது நடந்திருக்கும்? அக்காவுக்கும் எனக்கும் கல்யாணம், கார்த்தின்னு நீங்க சமயத்துலே செஞ்சிருக்க முடியுமா? இன்னிக்கு இவ்வளவு வசதியோட நாங்க இருக்கத்தான் முடியுமா?'' சங்கரியும் சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் பேசினாள்.

''மூணு வருசத்துக்கு முன்னாலே எனக்கு பிசினஸ் ஆரம்பிக்க ஆயிரக்கணக்கில் டாலர் அனுப்பிச்சதும் அண்ணன் தானே. அந்தச் சமயத்துல டாலர் வரலேன்னா இன்னிக்கும் அதே கிளார்க்கு வேலையிலேதானே நான் முட்டிக்கிட்டு இருக்கணும்!'' மூர்த்தியும் உரக்கவே பேசினான்.

அப்பாவிடம் இல்லாத பணம் அமெரிக்க அண்ணனிடம் இருந்ததால் 'லாயல்டி' என் பக்கம் திரும்பியது. அப்பா இவர்களுக்கு எதுவுமே செய்யவில்லையாம். இதையே காரணமாக வைத்து, அப்பாவைத் தனியாக ஒரு வாடகை வீட்டில்... ஒதுக்கப் பட்டது அப்பாதான் என்று இப்போது எனக்குப் புரிந்தது. மாலதி, சங்கரி, மூர்த்தி இவர்கள் அப்பாவைத் தங்களிடத்தில் மாற்றி மாற்றி வைத்துக் கொண்டு, அவருடைய தேவைகளைக் கவனிப்பதாய் நான் தான் தவறாக நினைத்திருந்தேன். இதுவரை

அப்பாவும் அவனுக்கு எதுக்கு வீண் கவலை' என்று எனக்கு எழுதாமலே இருந்தாரே என்பதும் வருத்தம் அளித்தது.

நான் அப்பாவை ஏறிட்டுப் பார்த்தேன். அவர் சாவதானமாக மூக்குக் கண்ணாடியை எடுத்துக் கைக் குட்டையால் துடைத்துக் கொண்டார். என்னைப் பார்த்துப் பேசினார். ''டேய்... நீ வந்ததும் வராததுமாய் இப்படியெல்லாம் நடந்துடிச்சி. எதையும் மனசிலே வைச்சிக்காதே'' என்றார். மெல்லச் சிரித்தார். சிரிப்பில் வேதனையா, இல்லை வேதனையே சிரிப்பாயிற்றா என்று எனக்குப் புரியவில்லை.

''என் மனசிலே இருக்கிறதை நான் சொல்லிடறேன். அப்புறம் இவங்க மூணு பேரும் இதுமாதிரி பேசறாங்களான்னு பார்க்கலாம்,'' என்றேன்.

''அதெல்லாம் எதுக்குடா இப்போ...'' அப்பா இழுத்தார்.

''இப்பத்தான் சொல்லணும்'' என்று உறுதியாகவே சொன்னேன்.

மற்ற மூவரும் என்னையே உற்றுப் பார்த்தனர். நான் பேசாவிட்டால், அப்பா மீது நான் காட்டும் மதிப்பும் பரிவும் இவர்களுக்கு என்றுமே ஒரு புதிராகத்தான் இருக்கும் என்று அவர்கள் பார்வையே சொல்லியது.

''நான் சொல்றது நடந்து இருபது வருசமாச்சு. அப்ப நீங்க மூணுபேரும் ரொம்பச் சின்னவங்க. எனக்கு மெட்ராசலே படிப்பு முடிஞ்சதும் அமெரிக்கா போக வாய்ப்புக் கிடைச்சது; ஆசை யாரை விட்டது? ஆனா பயணத்துக்கு ஐயாயிரம் ரூபாய் தேவையாயிருந்தது. அப்பாகிட்டே ஏது அவ்வளவு பணம்? ஒரு பாங்கிலே கடன் வாங்கலாம்னு போனேன். ஏற்பாடு செஞ்சாங்க. என்மேல இருக்கிற நம்பிக்கையிலே அப்பாவும் கடன் வாங்கக் கையெழுத்துப் போட்டார். அன்னிக்கு அப்பா கையெழுத்துப் போடலேன்னா நான் அமெரிக்கா போயிருக்கவே முடியாது... இன்னிக்கு நாம எல்லாருமே இந்த அளவு வசதியோட இருக்கவும் முடியாது. விவரம் தெரியாம எனக்குப் புகழ் பாடறீங்க. அப்பா இல்லேன்னா உங்க அண்ணனுக்கு அமெரிக்கா இல்லே. பெருமை எல்லாமே அப்பாவுக்குத்தான்... எனக்கில்லே. நீங்க இனிமேயாவது புரிஞ்சிக்கிட்டு நடந்துக்கணும்'' என்று நான் முடித்தபோது, என் குரல் தழுதழுத்தது.

அப்பா எழுந்து வந்து என்னைக் கட்டிக் கொண்டார். அப்பாவின் காலைத் தொட்டு வணங்கிய என் தம்பி, தங்கைகளை நான் குனிந்து எழுப்பினேன்.

# பெரிய மனிதர்களும் காக்கிச் சட்டைகளும்

"கொஞ்சம் நகருய்யா."

நான் நகர்ந்து இடம் விடுவதற்குள் என்னை உரசியபடி உட்கார்ந்தான் அந்த மனிதன். கடா மீசையும் மல் ஜிப்பாவும் பழ வாசனையும் அந்த மனிதனைப்பற்றிய ஓர் அறிமுகத்தைக் கொடுத்தாலும், அவன் அணிந்திருந்த கோல்டு ஸ்டிராப் வாட்சும் தங்க செயினும் அவன் பின்னே பேருந்தில் அவனோடு ஏறிய இரண்டு ஆட்களும், அவன் கொஞ்சம் ஏடாகூடமான ஆளாகத்தான் இருக்க வேண்டும் என்பதை உணர்த்திற்று.

இருந்தாலும் வார்த்தையில் கொஞ்சம் நாகரிகம் வேண்டாமா? அரசுப் பணியில் சமூக நல அதிகாரியாகப் பணியாற்றும் என்னிடமே இப்படியென்றால் மற்றவரிடம் இந்த மனிதன் எப்படி நடந்து கொள்வான் என்று நினைத்தபடி என் மனைவியை நகரச் சொல்லி கொஞ்சம் தாராளமாகவே அவனுக்கு இடம் விட்டேன்.

அவனுடைய ஆட்கள் இருவருக்கும் இடம் கிடைக்காமல் போகவே இந்த மனிதன் அவர்களைப் பார்த்து, "ஏன் உட்காருலே?" என்று வினவ. "இல் லேண்ணே, இடமில்லே" என்றார்கள்.

உடனே அந்த மனிதன் என்னிடம் திரும்பி, "நீ எங்க இறங்கணும்?" என்று ஒருமையில் விளித்தான்.

நான் ஊரைக் குறிப்பிட்டேன்.

"இதோ, இன்னும் நாப்பது கிலோ மீட்டர்தான். வந்துடும். நாங்க ரொம்பத் தொலைவு போவணும். நீங்க ரெண்டு பேரும் எந்திருச்சி இப்படி நின்னுக்கிடுங்க" என்றவன், அவன் ஆட்களிடம், "இங்கண குந்திக்கிடுங்கப்பா" என்றான், ஏதோ நான் என் மனைவியோடு எழுந்து அவர்களுக்கு இடம் விட்டதைப் போல.

நான் அந்த மனிதனிடம். "நாங்க ஏன் நிற்கணும். நீங்கதானே இப்ப ஏறுனீங்க?" என்றேன்.

"ம்... ரிசர்வேஷன் செய்திருக்கியா? எந்திரிடா சரிதான்" என்று இரைந்தான்.

அதற்குள் அக்கம் பக்கத்துப் பயணிகள் கவனிக்க ஆரம்பித்தார்கள். ஆனால் ஒருவரும் ஒன்றும் பேசவில்லை.

"ஏன் மரியாத இல்லாம பேசறீங்க? நான் எழுந்திரிக்க மாட்டேன்."

அந்த மனிதன் ஆக்ரோஷமாக எழுந்தான். என் காலரைப் பிடித்து என்னைத் தூக்கினான்.

என் மனைவி "ஐயோ, என்ன அநியாயம் இது? கேக்கறதுக்கு ஆள் இல்லையா?" என்று கூச்சலிட, நடத்துனர் என் இருக்கைக்கு விரைந்து வந்தார்.

"என்ன ஸார் கலாட்டா?" கண்டக்டர் கேட்க, "டேய் போடா அப்பால பிஸ் கோஸ்த்து" என்று அவரை அந்த மனிதன் தள்ளிவிட, அவர் விசில் அடித்து வண்டியை நிறுத்தினார்.

எனக்குச் சில இருக்கைகள் பின்னாலிருந்த ஒருவர் எழுந்து வந்து, தான் கஸ்டம்ஸில் பணிபுரியும் அதிகாரி என்று அறிமுகப் படுத்திக் கொண்டார்.

"ஏன் ஸார், நான் பார்த்துக்கிட்டுத்தான் வந்தேன். வண்டியிலே ஏறி ஏன் இப்படி கலாட்டா செய்யறீங்க?" என்று அந்த மனிதனைக் கேட்டார்.

"வாடா மச்சான், உடம்பு ஒத்தடம் கேட்குதா?" என்றபடி அவர் முகத்தில் ஓங்கி ஒரு குத்துவிட்டான் அந்த மனிதன். தடுமாறி விழுந்தார் அந்த அதிகாரி. பிறகு ஆவேசமாக எழுந்து வந்து, "உன்னை போலீஸ்லே கம்ப்ளைன்ட் பண்ணி என்ன செய்யறேன் பார்...." என்றார்.

"ஏலே, உன்னை இங்கேயும் உதைப்பேன்; ஸ்டேஷன்லேயும் வச்சு உதைப்பேன்டா நான்..." என்றபடி அந்த மனிதன் மீண்டும் அவரை ஓங்கி ஓர் அறை விட்டான். கைகளால் அவரைப் பிடித்துத் தள்ளிக் காலால் அவரது மார்பில் ஓங்கி ஒரு உதை விட்டான்.

இதற்குள் சில பயணிகள் 'ஓ' என ஓலமிடவும் நடத்துனர் ஓடிச்சென்று ஓட்டுநரிடம் விளக்க, ஓட்டுநர் எழுந்து வந்தார். அதற்குள் அந்த அதிகாரியைக் காப்பாற்றப்போன என்னையும் அந்த மனிதன் முகத்தில் அறைய

என் மூக்குக் கண்ணாடி தெறித்து விழுந்தது. வந்த ஓட்டுநரிடம் அந்த மனிதன், ''டேய், நீ போய் வண்டியை ஓட்டு...

போதியா... இல்லே முகரையப் பேக் கட்டுமா?'' மிரட்டவும், கொஞ்சம் ஒடிச லாக இருந்த ஓட்டுநர் பயந்துபோய் வண்டியை ஸ்டார்ட் செய்யப்போனார்.

அதற்குள் என்னையும் என் மனைவி யையும் தரதர வென அந்த மனிதரின் ஆட்கள் கையைப் பிடித்து இழுக்க, ''ஐயா, விட்றுங்க, நான் இங்கேயே இறங்கிடறேன்'' என்றேன் நான்.

அவசர அவசரமாக என் மனைவியும் லக்கேஜ்களை எடுத்துக் கொண்டு இறங் கினாள். எ ங் க ளு க் காக பரிந்து வந்து அடிபட்ட அந்த அதிகாரியும் எங்க ளோடு இறங்கிக் கொண் டார்.

அந்த அதிகாரி உதடு வீங்கி, கடைவாயில் ரத்தம் க சி ய ஆடையெல்லாம் இழிந்து, பார்க்கப் பாவமாக இருந்தார்.

கொஞ்ச தூரம் நடந்து சென்று ஒரு கூட்டுரோட்டை அடைந்தோம். அங்கே ஒரு டீக்கடை பெஞ்சில் அந்த அதிகாரியை - அவர் பெயர் தண்டபாணி - அமர்த்திக் குளிர்ந்த நீரில் அவரது நெற்றி, உதடுகளைத் துடைத்து விட்டேன். கொஞ்சம் ஆசுவாசப் படுத்திக் கொண்டோம்.

• ''என்ன ஸார் ஆச்சு. ஏதாச்சும் ஆக்ஸி டெண்ட்டா?'' கேட்டபடி ஒரு சிறு கும்பல் எங்களைச் சூழ்ந்தது.

''பக்கத்திலே போலீஸ் ஸ்டேஷன் எங்கே யிருக்கு?'' விசாரித்தார் அவர்.

முதலில் புகார் கொடுக்க வேண்டும் என முடிவு செய்து ஒரு டாக்ஸி ஏதேனும் அந்தப் பக்கம் கிடைக்குமா என்று விசாரித்தோம். அதற்குள் ஒரு சோப் கம்பெனி வேன் ஒன்று



புதுவை சந்திரஹரி

வரவே, அதன் டிரைவரிடம் கேட்டுக் கொள்ள, பத்து நிமிடங்களில் பக்கத்து ஊர் காவல் நிலையத்தில் நாங்கள் இருந்தோம்.

அந்த காவல் நிலையம் பெரியதாக இருந்தது. டி.எஸ்.பியே இருப்பதாகத் தெரிய, அவர் அறைக்குள் நுழைந்து எங்களை அறிமுகப்படுத்திக் கொண்டோம்.

எங்களுடைய கந்தல் கோலத்தையும் வாங்கிய அடிகளின் தடயங்களையும் பார்த்தவர், நாங்கள் நடந்ததை விளக்கவும் ஆவேசமாகிப் போனார்.

நாங்கள் பயணித்த பேருந்து அந்த ஊரில் அரைமணி நேரம் சாப்பாட்டிற்கு நிற்கும் என்று கூறியவர், உடனே ஒரு சப்-இன்ஸ்பெக்டரை அழைத்து ஜீப்பில் சென்று அந்த முரடர்களைப் பிடித்து வரப் பணித்தார். ஒருவேளை பேருந்து புறப்பட்டிருந்தாலும் பக்கத்து ஊர்வரை விரட்டிப்பிடித்து அந்த ஆட்களைக் கொண்டு வர வேண்டும் என்றும் உத்தரவிட்டார்.

எங்களை ஒரு புகார் எழுதச் சொன்னார். நாங்கள் தனித்தனியாக எழுதிக் கொடுத்தோம்.

'அந்தக் குண்டர்கள் எங்கே அகப்படப் போகிறார்கள்?', என்று நினைத்திருந்த எனக்கு ஒரு இருபது நிமிட நேரத்தில் ஜீப்பிலிருந்து அந்த மூன்று தடியர்களோடு இறங்கிய சப்-இன்ஸ்பெக்டரைப் பார்த்ததும் ஆச்சரியமாகப் போயிற்று. காவல் துறையின் திறமையை எண்ணி மனதுக்குள் ஒரு 'சபாஷ்' போட்டேன்.

''வாங்கடா, டேய் என்னாடா நினைச்சுகிட்டிருக்கீங்க'' என்று டி.எஸ்.பி அவர்களை அவர்கள் பாஷையிலேயே வரவேற்றது மனத்திற்குச் சந்தோஷமாக இருந்தது.

''நீங்க கொஞ்சம் வெளியிலே இருங்க. நான் இவன்களைக் கவனிக்கறேன்'' எனவும் நாங்கள் வெளியே வந்து அமர்ந்தோம்.

உள்ளே, கோபாவேசமாக இரைந்த டி.எஸ்.பியின் குரல் சிறிது சிறிதாக சுரம் குறைந்து மட்டுப்பட்டுக் கொண்டே வந்து, சற்றைக்குள் ஹாஸ்யங்கள் மலிந்த சம்பாஷணையாக உருமாறிச் சிரிப்பலைகளாக எங்கள் செவிகளில் பாயவே, நானும் நண்பர் தண்டபாணியும் துணுக்குற்றோம்.

'என்ன நடந்து கொண்டிருக்கிறது?' என்று நாங்கள் விழித்துக் கொண்டிருக்கையில், சிரித்தபடி அந்த மூவரோடும் டி.எஸ்.பி அந்த அறையை விட்டு வெளியேறி வந்த காட்சி எங்களை நிலைகுலையச் செய்தது.

டி.எஸ்.பி அந்த மூவரையும் ஜீப்பில் ஏற்றி, சல்யூட் அடிக்காத குறையாகக் கை குலுக்கி டிரைவரிடம் ஏதோ கூறி மரியாதையாக அனுப்பி வைத்தார்.

'என்ன நடந்து கொண்டிருக்கிறது?' என்று ஜீரணிக்க இயலாமல் நாங்கள் ஸ்தம்பித்து நிற்பதைப் பார்த்த டி.எஸ்.பி, ''ம்... வாங்க'' என்று உள்ளே அழைத்தார். மணியடித்து காப்பிக்கு ஆர்டர் கொடுத்தார். என்னைப் பார்த்து, ''அவர் இந்தத் தொகுதி எம்.எல்.ஏவோட தம்பி ஸார்.'' ஏதோ பூகவானின் அவதாரம் என்பது போல் ஆச்சரியத்தை வெளிப்படுத்தினார்.

''அதுக்கென்ன இப்போ?'' தண்டபாணி கேட்டார்.

''இத பாருங்க, சின்ன விஷயம். இதை விட்டுத் தள்ளுங்க. கொஞ்சம் தண்ணி சாப்டிருக்கார். அந்த வேகத்தில் கொஞ்சம் நிலை தடுமாறிட்டார். அதப்போய் ஏன் வீணே பெரிசுபடுத்துவானேன்?''

''ஏன் ஸார், குடிச்சிருக்காங்க. ரௌடித்தனம் அட்டூழியம் செய்திருக்காங்க. இதை இவ்வளவு சாதாரணமாச் சொல்லறீங்க?''

''என்ன இப்ப? கொலையா செய்துட்டாங்க?... ம்... நீங்க சொல்லறதையெல்லாம் சட்டப்படி நிருபிக்க முடியுமா? யோசனை பண்ணுங்க. நீங்க சொல்றதுக்கு என்ன சாட்சி இருக்கு?'' - அவர் பேச்சு திசை திரும்பியது.

''நாங்க வாங்கின இந்த அடிகள், காயங்கள் போதாதா?''

''இதெல்லாம் ஒரு தடயமா?'' சிரித்தபடி, ''பஸ் படியிலே வழுக்கி விழுந்தாக் கூட இந்த அடி படுமே!''

இவரே வக்காலத்து வாங்குவார் போலிருந்தது.

நான் செய்வதறியாது அவரையே பார்த்திருக்க, அவர் உடனே, ''ஏம்பா... எஃப். ஐ. ஆர். போட்டுட்டே?... இல்லையே? அந்தப் புகாரை கொண்டு வா...'' கான்ஸ்டபிளிடமிருந்து நாங்கள் கொடுத்த புகாரைப் பெற்று எங்கள் கண் எதிரிலேயே கிழித்துப் போட்டார். நாங்கள் அதிர்ந்தோம்.

''ஏன் ஸார், உங்க தம்பி, தம்பி பெண்டாட்டிக்கு இப்படி நடந்தாலும் இதைத்தான் செய்வீங்களா?''

''அப்ப பெரிய மனுஷங்ககிட்ட மோதிக் கிட்டு எங்க தலையிலே மண்ணை வாரிப் போட்டுக்கச் சொல்றீங்களா?'' என்றார் அமைதியாக.

அவர் அகாரதியில் அராஜகவாதிகள் பெரியவர்களாகி விட்டபோது, போலீஸ்காரர்கள் என்பவர்களும் அத்தகைய பெரிய மனிதர்களின் அடியாட்கள் தானே!

நாங்கள் அமைதியாக வெளியேறினோம்.

அட, அப்படியா?

# காலணி கண்டுபிடிக்கப்பட்ட காலம்!

!! நமது சூரிய மண்டலத்திலுள்ள இடப் பொருளில் 99.8 சதவிகிதம் சூரியனிலேயே உள்ளது. மற்ற கிரகங்களின் பங்கு 0.2 சதவிகிதமே. சூரியனின் கன பரிமாணம் பூமியை விட மில்லியன் மடங்கு அதிகமானது.

!! சூரியனின் பரப்பில் நிற்க முடியுமானால், பூமியில் பத்து கிலோ எடையுள்ள ஒரு பொருள் அங்கு 280 கிலோ எடையிருப்பதைக் காணலாம். இதற்குக் காரணம் பூமியைப் போல் பன்மடங்கு அதிகமான ஈர்ப்பு சக்தி (சூரிய ஈர்ப்பு சக்தி என்று சொல்லலாம்). இதுவே சூரிய மண்டலத்தின் பல்வேறு கிரகங்களையும் ஓர் ஒழுங்கில் வைத்து, நடத்துகிறது.

!! உலகின் மிகப் பழைய தலைநகரம் டிமாஷ்க் (டமாஸ்கஸ்) - சிரியாவின் தலைநகரான டமாஸ்கஸில் கி.மு. 2500 முதல் வாழ்க்கை நடந்து வருகிறது.

!! கிரேக்க அறிஞர் அரிஸ்டாடில் கொண்டிருந்த பல தவறான நம்பிக்கைகளில் ஒன்று; பெண்களைக் காட்டிலும் ஆண்களுக் குப் பற்கள் அதிகம் என்பது. இத்தனைக்கும் அரிஸ்டாடில் இரு முறை மணம் செய்து கொண்டார்!

!! அமேஜான் நதிக்கரையில் வாழ்ந்த (அமெரிக்க) இந்தியப் பழங்குடியினர் தற்செயலாக ரப்பர் பூட்ஸ்களைக் கண்டுபிடித்தனர். ரப்பர் மரங்களிலிருந்து ஒழுகிய திரவத்தில் இவர்கள் பாதங்களை முக்கி எடுத்தனர். அது காய்ந்து கவசம் போல் ஆகி, பூச்சிக்கடி, கற்கள், முள் போன்றவற்றிலிருந்து அவர்களைக் காத்தது.

!! அடால்ஃப் ஹிட்லர் ஆட்சியிலிருந்த போது ஜெர்மன் குடியானவர்களும் போலீஸ்காரர்களும் தங்கள் குதிரைகளை 'அடால்ஃப்' என அழைக்கத் தடை விதித்தார்.

!! ஏஜியன் கடலில் உள்ள ஒரு கிரேக்கத் தீவின் பூமிப் பரப்பில் சோப்புப் போன்ற படிமம் உள்ளது. இதனைக் குளிக்கவும் துணி துவைக்கவும் அவ்வூர் மக்கள் பயன்படுத்துகிறார்கள்.

!! குரு (Kuru) என்ற சிரிக்கும் நோய் கிழக்கு நியூ கினிப் பகுதியின் ஃபோர் (Fore) பழங்குடியினரை மட்டுமே பீடிக்கிறது. இந்நோய் கண்டவர்களுக்கு மரணம் உறுதி! மனித மாமிசம் உண்ணும் பழக்கமே இதற்குக் காரணம் எனக் கருதப்படுகிறது.

தொகுப்பு : உதய் லால்



# பாலம்



(பாலம் மூலம் இணையும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பேற்க இயலாது.)

●● தினமணி கதிர் 1974ல் நடத்திய நாவல் போட்டியில் எனது ''லங்காரி'' இரண்டாவது பரிசு பெற்றது. இதனை விமர்சித்த 'தமிலன்' நாவலின் ஊடே ஒரு சினி காமிராவையும் ஒலிப்பதிவுக் கருவியையும் வைத்து இயக்கினால் அருமையான திரைப்படம் உருவாகும் என்று கூறியிருக்கிறார். தயாரிப்பாளர் அல்லது இயக்குனர் தொடர்பு கொள்ள முகவரி :

**- ஆர். வனிதா,**
**902, 72வது தெரு,**
**11வது செக்டர்,**
**மேற்கு கே. கே. நகர்,**
**சென்னை - 600 078.**

●● இதுவரை அச்சில் வராத, சதாசிவ பிரும்மேந்திராளின் வடமொழி சுலோகங்களைத் தமிழ், ஆங்கில மொழிபெயர்ப்புடன் வைத்திருக்கிறேன். ஒப்புநோக்கத் தமிழ்ப் பாடல்களையும் மேற்கோள்காட்டியிருக்கிறேன். அச்சிட்டுத் தங்கள் வீட்டு விசேஷங்களில் விநியோகிக்க விரும்புவோர் எழுதவும்.

**- டி. ஆர். லக்ஷ்மி நாராயணன்,**
**6/904, ஷியாம் நிவாஸ்,**
**கா. ரா. பாளையம், பவானி - 638 301.**

●● ஓய்வுபெற்ற அரசு அதிகாரியான நான் கர்நாடக சங்கீதத்தில் ஈடுபாடு உள்ளவன். சபா நடத்திய அனுபவம் உண்டு. நான் வசிக்கும் இந்த வட்டாரத்தில் ரசிகர்களின் ஆர்வத்தைப் பூர்த்தி செய்ய ஒரு சபா ஆரம்பிக்க எண்ணுகிறேன். ரசிகர்கள் - குறிப்பாக இளைஞர்கள் - தொடர்பு கொள்வார்களா?

**- பொன். கே. மூர்த்தி,**
**3, ராஜேந்திர பிரசாத் சாலை,**
**நேரு நகர், குரோம்பேட்டை,**
**சென்னை - 600 044.**

●● கண்ணன் சிறுவர் பத்திரிகையின் 1964, 65, 66, 67-ம் வருட தீபாவளி மலர்கள் தேவை. மலர் ஒன்றுக்கு ரூ 50/- தரப்படும்.

**- க. ராஜேந்திரன்,**
**பொறையார் சாலை,**
**மங்கைநல்லூர் - 609 404.**

●● தோட்டக் கலையில் ஆர்வம் இருந்தபோதிலும் இடப் பற்றாக்குறை. அதனால் போன்ஸாய் - BONZAI - முறையில் மரம் வளர்க்க ஆவல். இது பற்றிய விவரம் அறிந்தவர்களின் அறிவுரைகள் - குறிப்புரைகள் நாடுகிறேன்.

**- ச. அருளமுது,**
**4, வீரமாமுனிவர் தெரு,**
**கபிலர் நகர்,**
**திருவள்ளூர் - 602 002.**

●● லெண்டிங் லைப்ரரி நடத்தி வருகிறேன். பழைய புத்தகங்கள் நன்கொடையாக அல்லது விற்பனைக்குத் தர விரும்புவோர் தொடர்பு கொள்க. நன்றி.

**- அ. முல்லைநாசன்,**
**டி. ஜி. காம்ப்ளெக்ஸ்,**
**பாலக்கோடு,**
**தருமபுரி (மாவ) 636 808.**

●● கதை, கவிதை, கட்டுரை எழுதும் திறமை படைத்த இளைஞர்களை இருபத்திரண்டு ஆண்டுகளாகச் சிறப்பாக நடந்து வரும் ''கவியமுது'' மாத இதழ் இனிதே அழைக்கிறது.

**- பா. இளையபெருமாள்,**
**23, பெரியராசிங்கன் வடக்குத் தெரு,**
**வடசேரி, நாகர்கோவில் - 629 001.**

●● நான் ஆரம்ப காலத்தில் ''வண்ணன்'' என்ற பெயரில் ''துரோகிகள்'' என்று ஒரு நூல் எழுதினேன். எம். சூரி என்னும் பதிப்பாளரால் வெளியிடப்பட்டது. ஐம்பதுகளின் முற்பகுதியில் பிரசுரமான அதை மறு பதிப்புக்காகத் தேடுகிறேன். இந்தப் புத்தகத்தை வைத்திருப்பவர்கள் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். மறு பிரசுரம் ஆனதும் ஒரு பிரதி திருப்பித் தர முடியும்.

**- பூவண்ணன்,**
**1, பாரதி பூங்கா 4வது குறுக்குச் சாலை,**
**கோயமுத்தூர் - 641 011.**

## சார்மினார் சானல்



# அரசியலில் குதிக்கிறார் சிரஞ்சீவி!

● நடிகர் சிரஞ்சீவிக்கும் அரசியலில் நுழைய ஆசை வந்துவிட்டது. ஒரு மாநிலக் கட்சியைத் தொடங்கத் தீவிரமாக ஆலோசித்து வருகிறார். காங்கிரஸின் மேல் மக்கள் கொண்டுள்ள அதிருப்தியையும், என்.டி.ஆர் மேலுள்ள மோகம் குறைந்து வருவதையும் பயன்படுத்திக் கொள்ள நினைக்கிறார். ஆளுங் காங்கிரஸில் அதிருப்தி கொண்ட சில முக்கியஸ்தர்கள் அவர் ஆரம்பிக்கும் கட்சியில் சேரலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. சிரஞ்சீவிக்கு இவ்விஷயத்தில் டைரக்டர் தாசரி நாராயணராவ் பின்பலமாக இருக்கிறார். ''சினிமா நடிகராக இருந்து, கட்சி தொடங்கிய ஒன்பது மாதங்களில் என்.டி.ஆரால் ஆட்சிக்கு வர முடிந்தது என்றால் என்.டி.ஆரை விட பல லட்சம் ரசிகர்களைக் கொண்ட சிரஞ்சீவியால் ஆட்சிக்கு வர முடியாதா என்ன?'' என்கிறார் அவருடைய ரசிகர் மன்றத் தலைவர் ஒருவர்.

● பதினெட்டு வயது கட்டையாவுக்கு கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற ஆசைதான். ஆனால் அவர் பெற்றோர் அவர் அதீத உயர வளர்ச்சி அவருடைய சகஜ வாழ்க்கைக்குத் தடையாக இருப்பதாகவும், ஆபரேஷன் மூலம் வளர்ச்சியை நிறுத்த வேண்டும் என்றும் உஸ்மானியா மருத்துவமனையில் அட்மிட் செய்திருக்கிறார்கள். இதற்கான ஆபரேஷன் செலவை ஏற்றுக் கொள்ள வசதியில்லை பெற்றோர்களுக்கு. அரசும் ஏற்க மறுக்கிறது. ஏழடி ஆறங்குலம் உயரமுள்ள கட்டையா இன்னும் சில மாதங்களில் ஆசியாவின் உயரமான மனிதன் என்ற பட்டத்தைப் பெற்று விடுவார். உயரத்திற்கும், தினப்படி வாழ்க்கைக்குமிடையில் தினப்படி தகராறுதான் இப்போது.



● PWG தடை செய்யப்பட்டபின், வெடிகுண்டொன்றை வெடிக்கவைத்து, இருபது போலீசாரைக் கொன்றார்கள். போலீஸார் பயணம் செய்த ஜீப் சுக்குநூறானது. மூன்று போலீசார் தப்பித்து ஓடும்போது நக்சலைட்டுகள் மறைந்திருந்து சுட்டதால், அவர்களும் உயிர் இழந்தனர். படுகோரமான குண்டு வெடிப்பு. LTTE யிடம் விசேச வெடி குண்டுப் பயிற்சிகளை PWG பெற்றிருப்பதாகப் பிடிபட்ட நக்சலைட் ஒருவர் சொல்லியிருக்கிறார்.

● ''தெலுங்கு தேச ஊழியர் ஒருவர் கொல்லப்பட்டால், பத்து காங்கிரஸார் தலைகள் உருளும்'' என்றார் என்.டி.ஆர். ஜனார்த்தனன் ரெட்டி ''இது போன்ற வன்முறைப் பேச்சுகள் நீடித்தால் PWG யைப் போல் தெலுங்கு தேசம் கட்சியும் தடை செய்யப்படும்''. - என்றார். ''தைரியமிருந்தால் தடை செய்துபார். ரத்தக் களரியாகும் நாடு'' - என்று மீண்டும் என்.டி.ஆர் ஆவேசமாகப் பேசியிருக்கிறார்.

● பிரதமரின் நந்தியாலா பாராளுமன்றத் தொகுதியில் உள்ள அல்லகட்டா தொகுதியில் நடந்த இடைத் தேர்தலில், தெலுங்கு தேசம் தான் வென்றது. இதில் காங்கிரஸாருக்குப் பலத்த ஏமாற்றம்.

– அப்பன்

# கொத்துக் கொத்தாய் உளுந்து; கத்தை கத்தையாய்ப் பணம்!



அப்பா சந்திரசேகர், மகன் கிரீஷ்

பம்பாயில் கைநிறையச் சம்பளம் கிடைக்கிற வேலையில், இருந்தார் இளைஞர் கிரீஷ். அக்கவுண்ட்ஸில் பட்டம் பெற்று, ஏர்கண்டிஷண்ட் அறையில் உட்கார்ந்தபடி சம்பளம் பெற்றுக் கொண்டிருந்தது ஏனோ அவருக்கு மனத்தளவில் திருப்தி அளிக்கவில்லை. ஒரு வாய்ப்புக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில்தான் உளுந்துப் பயிர் பற்றி விவசாயத் துறை நிபுணர் எஸ். எஸ். நாகராஜன் 'தினமணி'யில் எழுதிய கட்டுரை ஒன்றைத் தற்செயலாகப் படிக்க நேர்ந்தது.

மறுநாளே -

வேலையை உதறித் தள்ளினார். நேராகப் புறப்பட்டுச் சொந்த கிராமமான ரங்கநாதபுரத்துக்கு வந்து சேர்ந்தார். திருக்காட்டுப் பள்ளியிலிருந்து சுமார் பத்து கிலோ மீட்டர் உள்ளே இருக்கிறது ரங்கநாத புரம். அதாவது கிழக்குத் தஞ்சாவூரைச் சேர்ந்த கிராமம்.

அப்பா சந்திரசேகர் ஓய்வு பெற்ற, தாவர இயல் பேராசிரியர். சாதாரணமாக, இந்தத் தஞ்சாவூர்ப் பக்கம் உள்ள அப்பாக்கள் எல்லாம் அரை ஏக்கர் - ஒரு ஏக்கர் உளுந்து பயிர் செய்தால் போதும் என்பார்கள். 'பணத்தை வீணாகச் செலவழிக்காதே!' என்பார்கள்.

சந்திரசேகர் அப்படி அல்ல!

மகன் கிரீஷ் பதினெட்டு ஏக்கரில் உளுந்து பயிர் செய்யப் போகிறேன் என்றதும், ''ஆகா, பேஷாகப் பண்ணு'' என்று ஊக்கம் தந்து உற்சாகப்படுத்தினார்.

பலன் -

இளைஞர் கிரீஷுக்கு, ஓர் ஏக்கருக்குக் கிட்டத்தட்ட 1000 கிலோ உளுந்து மகசூல் கிடைத்திருக்கிறது!

கிலோவுக்குப் பத்து ரூபாய் விலை வீதம் ஓர் ஏக்கரில் மட்டும் பத்தாயிரம் ரூபாய்! இதில் மூவாயிரம் ரூபாய் சாகுபடிச் செலவு போக, ஏக்கருக்கு நிகர லாபம் சுமார் ஏழாயிரம் ரூபாய். பதினெட்டு ஏக்கரில் சுமார் ஒரு லட்சத்து இருபத்தாறாயிரம் ரூபாய் வருமானம்!

இத்தனையும் எண்பத்தைந்தே நாட்களில்!

அக்கம் பக்கத்தில் இருக்கும் முற்போக்கு விவசாயிகள் சிலர், நேரடியாக வந்து கிரீஷையும் சந்திரசேகரையும் அவர்கள் பண்ணையில் வந்து சந்தித்துப் பயிரையும் பார்வையிட்டார்கள் : செடி முழுக்கக் காய்தான்! அப்படியே அசந்து போய் விட்டார்கள்.

கிரீஷ் மற்றவர்கள் மாதிரி, உளுந்தை ஏனோ தானோ என்று பயிர் செய்யவில்லை. முறையாகப் பயிராக்கும் முறைகளைக் கையாண்டு வெற்றி கண்டார்.

தானிய உற்பத்தியில் நாம் தன்னிறைவு அடையவில்லை. தானியம், குறிப்பாக உளுந்து, நிறையத் தேவைப்படுகிறது. ஆக, தானியப் பயிரை, பணப் பயிராக மாற்றி விட்டார் கிரீஷ்.

கெட்டியான கரி மண் பிரதேசங்களில், பாசன வசதி உள்ள இடத்தில், பயமில்லாமல் உளுந்துச் சாகுபடி செய்யலாம். ஜனவரி முதல் ஜூன் வரையிலான கோடைப் பருவம் ஏற்ற காலம். (அதிக மழை இருக்கலாகாது; தண்ணீர் தேங்கி விடும்.)

கோடையிலா?

ஆமாம். சம்பிரதாயமான ஆடிப்பட்டம், புரட்டாசிப் பட்டம், தைப்பட்டம் எல்லாம் உளுந்துப் பயிர் சீசன்தான். அவை தவிர, கோடையும் ஏற்ற பருவமே.

உளுந்துக்கு அடுத்து மாற்றுச் சாகுடியாக நெல் பயிரிடும் போது, உரத்தில் பத்து சதவிகித சேமிப்பு இருக்கிறது. இதன் தழை, சருகை மாடுகளுக்கு ஏற்ற நல்ல தீனி என்பது மேலும் ஒரு ப்ளஸ் பாயிண்ட்.



☛ ஒரு கொத்து உளுந்துப் பயிர்

'விவசாயிகளுக்குச் சரி. எங்களுக்கு என்ன கூடுதல் பயன்?' என்று உபயோகிக்கிறவர்கள் கேட்டால், அதற்கும் பதில் இருக்கிறது. உளுந்து அதிகமான அளவுக்கு உற்பத்தியாகிற போது விலை குறையும். இட்லிக்கும் தோசைக்கும் அரைக்கும் போது, உளுந்தை அதிகம் பயன்படுத்தினால் மாவு பொங்கி எழும். எனவே அதிகமாகக் காணும். மிக மிருதுவாக இருக்கும் மாவு.

கிரீஷிடம் கடும் உழைப்பு இருந்தது. அப்பா உற்சாகம் கொடுத்தார். நம்பிக்கை பிறந்தது. துணிச்சல் காரணமாக, அரை ஏக்கர் - ஒரு ஏக்கருக்குப் பதில் பதினெட்டு ஏக்கரிலும் உளுந்து பயிர் செய்தார்.

ஆனால் இதற்கான முழுப் பெருமையும் சேர வேண்டியது தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்துக்குத்தான். கொத்துக் கொத்தாய்ச் செடி முழுக்க உளுந்து தழைக்கச் செய்ய முடியும் என்று ஆராய்ச்சி அளவில் கண்டுபிடித்தவர்கள் அவர்கள்.

கிரீஷ் அதைத்தான் செயலில் காண்பித்தார்.

**- சாருகேசி**

☛ பக்கத்து ஊர் விவசாயிகள் பார்வையிடுகிறார்கள்

# உங்கள் பால்காரர் ரயிலில் பால் கொண்டு தருவாரா?

என் பால்காரர் தருவார்.

பிரயாணத்தின் போது சாப்பாடு மற்றும் பானங்கள் விஷயத்தில் நீங்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். பால் திரிந்து விடும் அல்லது விரைவில் புளித்துப் போய் விடும். இது போன்ற சமயங்களில் அமுல் மில்க் பவுடர் டின் கையோடு கொண்டு செல் லுங்கள்.

அமுல் மில்க் பவுடர் கொண்டு நீங்கள் தூய்மையான, ஆடை நிறைந்த பாலே நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




## அமுல் மில்க் பவுடர்

RADEUS/AMP/7-86-TAM

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



# சித்ரா என்றொரு சிங்கம்!




சித்ரா தாயில்லாப் பெண். அவளையும் அவளது இரண்டு சகோதரிகளையும் ஒரு சகோதரனையும் அரும்பாடுபட்டு வளர்த்தார் தந்தை வாக்மாரே.

சித்ரா நன்றாகப் படித்து வக்கீலானாள். ஆறு வருடங்கள் அவள் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டு வெற்றிகரமாக வேரூன்றிக் கொண்டாள். அழகும் அறிவும் நிறைந்த தம் இருபத்தொன்பது வயது மகளுக்குத் தகுந்த வரன் பார்க்க ஆரம்பித்தார் வாக்மாரே.

தன்னம்பிக்கையும் துணிச்சலும் நிறைந்த நவீன பெண்ணான போதிலும் சித்ரா தனக்குத் தானே மாப்பிள்ளை தேடிக் கொள்ளத் தயங்கினாள். அப்பா எடுக்கும் முடிவே சரியானதாக இருக்கும் என்று எண்ணினாள்.

விட்டல் நாம்தேவ் ஷிண்டே என்ற இளைஞனைத் தேர்ந்தெடுத்தார் வாக்மாரே. நல்ல குடும்பம்; இன்ஜீனியரிங் படித்து அரசாங்க உத்யோகம் செய்யும் மாப்பிள்ளை; சொந்தத்தில் ஃப்ளாட் கூட உண்டு. சுற்றுவட்டாரத்தில் கவனமாக விசாரித்து ஷிண்டேவுக்கு எந்தவிதமான கெட்ட பழக்கமும் இல்லை என்பதை உறுதிப் படுத்திக் கொண்டார்.

முதலில் இரு குடும்பத்துப் பெற்றோரும் சந்தித்துப் பேசினார்கள். பின்னர் சம்பிரதாயமான பெண் பார்க்கும் படலம்; தொடர்ந்து நிச்சயதார்த்தம். பெண்ணும் மாப்பிள்ளையும் தனியே பேசிக் கொள்ளச் சந்தர்ப்பமே அமையவில்லை. சித்ரா இது பற்றி அதிகம் கவலைப்படவில்லை. அப்பாவின் தேர்வு தவறாக இருக்காது...

அப்பா வாக்மாரேயும் திருமணத் தேதியைக் குறித்து - பத்திரிகைகளையும் அச்சுக்குக் கொடுத்தார்.

கல்யாணப் பத்திரிகைகளை நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் குதூகலமாக அனுப்பிக் கொண்டிருந்த போதுதான் அது நடந்தது. மாப்பிள்ளை வீட்டார் 'கல்யாண ஷாப்பிங்' செய்ய வேண்டும் என்றார்கள். வரதட்சணை பற்றிய லேசு பாசான பேச்



**"ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தைப் பண்ணலாம்... தப்பே கிடையாது!"**

**"அதெல்லாம் சரிதான்... அதுக்காக மாப்பிள்ளை ரெண்டு, மூணு, எல். ஐ. சி. கம்பெனிங்களுக்கு முதலாளின்னு சொல்றது கொஞ்சம் ஓவரா படுதுங்க!"**

**- கவிட் ரவி**

கக்கள் அவர்களிடமிருந்து வெளிப்பட்டு, சீக்கிரமே ஒரு நீண்ட பட்டியல் உருவெடுத்து, அதுவே பெரிய அச்சுறுத்தலாகவும் திருமணத்துக்கான நிபந்தனையாகவும் மாறிவிட்டது.

தம் சக்திக்கு மீறிய எதிர்பார்ப்புகளை உடைய சம்பந்திகளை நேரில் பார்த்துப் பேசச் சென்றார் வாக்மாரே. சித்ராவும் வேறு சில உறவினர்களும் உடன் சென்றார்கள்.

மாப்பிள்ளை ஷிண்டேயுடன் ஐந்து நிமிடங்கள் தனியாகப் பேச வேண்டும் என்று கோரினாள் சித்ரா. 'எனக்கு நேரமில்லை; என் அம்மாவின் முடிவை நான் புறக்கணிக்க முடியாது. இந்தப் பிரச்னையைப் பற்றிப் 'பின்னால்' பேசிக் கொள்ளலாம்' என்று மறுத்து விட்டான் இஞ்ஜினியர் மாப்பிள்ளை. அவன் அம்மாவும் இடைமறித்து அவர்களை மேற்கொண்டு பேச விடாமல் தடுத்தாள்.

**ஒ**ரு வக்கீலுடன் மோதுகிறோம் என்பதை மறந்தனர் அந்த இஞ்ஜினியரும் அவன் தாயும். சித்ரா அந்தப் பகுதி காவல் நிலையத்துக்குச் சென்று புகார் பதிவு செய்தாள்.

திருமணத்துக்குப் பின்னர் எழும் வரதட்சணைப் பிரச்னைகளைப் பற்றி மட்டுமே அறிந்திருந்த காவல் துறையினருக்கு, வரதட்சணைத் தடைச் சட்டத்தின் நான்காவது பிரிவை நினைவூட்டினாள் சித்ரா. 'திருமணத்துக்கு முன் வரதட்சணை கேட்கும் குற்றம் அந்தப் பிரிவின் கீழே வருகிறது' என்றாள்.

விளைவு : அந்தப் பிரிவின் கீழ் கைது செய்யப்பட்டான் ஷிண்டே. ப்ரீமியர் கார், கலர் டி.வி., ஃப்ரிஜ் உள்ளடக்கிய வரதட்சணைப் பட்டியலைத் தாயுடன் சேர்ந்து வழங்கியதாகக் கூறப்படும் ஷிண்டே, வழக்கு முடிந்து குற்றவாளி என நிரூபிக்கப்பட்டால் ஏழு ஆண்டு ஜெயில் தண்டனை அனுபவிக்க வேண்டும்.

**ஊ**ரே சித்ராவைப் போற்றிப் பாராட்டுகிறது. ஆனால், வாக்மாரே இனி தம் மூன்று பெண்களுக்குக் கல்யாணமாகுமா என்று கவலைப்படுகிறார். எனினும் சித்ரா தன்னம்பிக்கையுடன் உறுதியாக இருக்கிறாள். வழக்குத் தொடரப்பட்டுள்ள பம்பாய் உல்லாஸ்நகர் கோர்ட் வழக்கறிஞர்கள் அனைவரும் சித்ராவுக்கு ஆதரவு தரும் எண்ணத்துடன் ஷிண்டேவுக்காக ஆஜராவதில்லை என முடிவு செய்துள்ளனர்.

"என் தந்தை சமரசம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறார். ஆனால் நான் அதை அனுமதிக்க மாட்டேன். வரதட்சணை கொடுத்துத் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். என்னைச் சமமாக நடத்தும் கணவன் கிடைக்கும் வரை காத்திருப்பேன். அப்படியொருவன் கிடைக்காவிட்டால் கன்னியாகவே இருக்கத் தயார்" என்று கூறும் சித்ரா, தமக்குத் தன்னம்பிக்கையும் துணிவும் தந்தது கல்வியும் தொழில் அனுபவமுமே என்கிறார்.

**நன்றி : சண்டே டைம்ஸ்**

## அடுத்த இதழில்...

◆ **"உப்புநீரே ஜலசா; என் உயிர்மூச்சே ஜலசா!"**

*பிஎச். டி. செய்யும் மீனவ இளைஞர்*



# இல்லத்தரசிகளுக்கான

# ஆங்கிலப் பயிற்சித் திட்டம்

## சேர்க்கை அறிவிப்பு

**இல்லத்தரசிகள் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் ஆங்கில மொழியை எளிய முறையில் கற்றுக்கொள்ள விவேகானந்தா கல்வி நிலையத்தினர் இத்திட்டத்தினை வழங்குகிறார்கள்.**

### பயிற்சியின் நோக்கம்

பள்ளியில் படிக்கும் தங்களது குழந்தைகள் ஆங்கிலப் பாட சம்மந்தமாகக் கேட்கும் சந்தேகங்களுக்கு விளக்கமளிக்க முடியவில்லையே என்று வருத்தப்படும் இல்லத்தரசிகளுக்கும்...

கணவருடன் விருந்து அல்லது விழாக்களுக்குச் செல்லும்போது மற்றவர்களிடம் சகஜமாக ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்று வேதனைப் படுவோருக்கும்...

ஆங்கில மொழியை மிகவும் எளிய முறையில் சொல்லித்தந்து, ஆங்கிலத்தில் சரளமாகப் பேசப் பயிற்சியளிப்பதே இத்திட்டத்தின் முக்கிய நோக்கமாகும்.

இல்லத்தரசிகள் மட்டுமல்ல வேலைக்குச் செல்லும் பெண்மணிகளும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

அலுவலகத் தொடர்பான கடிதங்கள் எழுத, மேலதிகாரிகளிடமும், மற்றவர்களிடமும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச இப்பயிற்சி மிகவும் உதவிகரமாக இருக்கும்.

### பயிற்சி முறை

நமது கல்வி நிலையத் தபால் முறைப் பயிற்சிப் பாடங்கள் ஓர் ஆசிரியர் உங்களுக்கு நேரில் பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதுபோல, உங்களது சந்தேகங்களுக்கு உடனுக்குடன் விளக்க மளிக்கும் வகையில் மிகச் சுலபமான முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பயிற்சியின் மூலம் நீங்கள் ஆறே மாதங்களில் ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டு, தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றலை நிச்சயம் பெற முடியும்.

இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெற விரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு கடிதம் எழுதினால் பயிற்சி பற்றிய விபரங்களை உடனே அனுப்பி வைக்கிறோம்.

---

விவேகானந்தா கல்வி நிலையம்
"இல்லத்தரசிகளுக்கான ஆங்கிலப் பயிற்சித் திட்டம்"
9 (L), நடேசன் தெரு,
தி.நகர், சென்னை-600 017

குறிப்பு: இல்லத்தரசிகளுக்கென காலை **10.30** முதல் **11.30** வரை மற்றும் **11.30** முதல் **12.30** மணி வரை நேர்முக வகுப்புகளும் நடைபெறுகின்றன.

Naga

# சூப்பர் ஜனாதிபதி

"சங்கர்தயாள் சர்மாவைத்தான் நான் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பேன். காரணங்கள் :

1. ஓரிரண்டு முறை தவிர துணை ஜனாதிபதியாய் இருந்தவர்களே ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

2. அறிவு, ஆற்றல், வயது முதிர்ச்சி காரணமாக அனுபவம், பக்தி... அனைத்தும் உள்ள பண்பாளர். எனவே, இவர் நிச்சயம் ரப்பர் ஸ்டாம்ப் ஜனாதிபதியாகச் செயலாற்ற மாட்டார்; மக்களின் நலனைக் கருத்தில் கொண்டே செயல்படுவார்.

3. மூத்த காங்கிரஸ் தலைவராக இருந்த போதிலும் ராஜ்ய சபாத் தலைவராகச் சிறந்த முறையில் பணியாற்றி எல்லாக் கட்சி உறுப்பினர்களிடமும் மதிப்பும் மரியாதையும் பெற்றவர்.

4. அப்பழுக்கற்ற அரசியல் வாழ்க்கையுடையவர் என்பதால் இவரால் ஜனாதிபதி பதவியின் பெருமையும் கூடும் என்பதோடு, பிற நாடுகளிலும் நம் நாட்டின் பெருமை கூடும்.

5. பிரதமர் தென்னாட்டைச் சேர்ந்தவர் என்பதால், ஜனாதிபதி வட நாட்டைச் சேர்ந்தவராக இருப்பது இந்திய ஒருமைப்பாட்டுக்கும் உறுதுணையாக இருக்கும்.

- ஆர். தங்கம், சென்னை - 61.

***பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகை பரிசு பெறுபவர் :***

***- ஆர். தங்கம்,***
***ஐஸ்வர்யா அபார்ட்மெண்ட்,***
***12/1, 29வது தெரு,***
***நங்கநல்லூர், சென்னை - 600 061.***

## தாழ்த்தப்பட்டோர் நம்பிக்கை பெற....

கீழ்க்கண்ட காரணங்களால், நான் ராம் விலாஸ் பாஸ்வானைத்தான் தேர்ந்தெடுப்பேன்.

நமது ஜனநாயக அமைப்பின் மிக உயர்ந்த பதவி ஜனாதிபதி பதவி. பாஸ்வானைத் தேர்ந்தெடுப்பது, அந்தப் பதவியில் தாழ்த்தப்பட்ட சமூக மக்களும் தேர்ந்தெடுக்கப்படலாம் என்பதன் முதல்படி. அன்று கோயில்களுக்குள் தாழ்த்தப்பட்டவர்கள் நுழைவதற்காக மிகவும் பாடுபட்ட காந்திஜி, ராஜாஜி போன்றோரின் ஆத்மாக்களும் இன்று ஒரு தாழ்த்தப்பட்டவர் ஜனாதிபதி மாளிகைக்குள் நுழைவதை வாழ்த்தும்.



இவற்றோடு தாழ்த்தப்பட்ட மக்களும் அவர் ஜனாதிபதியாவதன் மூலம் மனோ தைரியம் அடைவார்கள் என்பதால், அம்மக்கள் தாங்கள் ஒதுக்கப்படவில்லை என்கிற நம்பிக்கையையும் பூரணமாகப் பெறுவார்கள்.

- அ. கருமார், காட்டுக்காஹூர்.

## ஆர். விக்கே என் வோட்டு!

மண்டல், மந்திர் பிரச்னைகள், பஞ்சாப் படுகொலைகள், காஷ்மீர்த் தீவிரவாதிகள், போதாததற்கு நிலையற்ற மத்திய அரசுகள்... என்று கடந்த இரண்டாண்டுகளில் எத்தனையெத்தனை உலுக்கும் பிரச்னைகள். இத்தனைக்கும் சிகரமாக ராஜீவ் காந்தியின் படுகொலை நாட்டையே அதிரச் செய்த போதும் அனைத்துக்கும் ஈடு கொடுத்து, அனைவரும் வியந்து பாராட்டும் வண்ணம் செயலாற்றி, நம்மையெல்லாம் நிம்மதிப் பெருமூச்சு விடச் செய்தவர் ஆர். வி. அவர்கள் தாம். எனவே, மீண்டும் அவரையேதான் நான் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பேன்.

- லால்குடி
கிருஷ்ணமூர்த்தி,
பண்ருட்டி.



## அலெக்ஸாண்டரையே தேர்ந்தெடுப்பேன்!



மாநில ஆளுனர் பதவி என்பது வெறும் அலங்காரப் பதவிதான் என்பதை மாற்றியமைத்தவர் பி.ஸி. அலெக்ஸாண்டர். ஒரு நெருக்கடியான சூழ்நிலையில் ஓர் ஆளுனர் எப்படியெல்லாம் நிர்வாகத்தைச் செம்மைப்படுத்தி மக்களுக்குத் தொண்டாற்ற முடியும் என்பதைத் தமிழக ஆளுனராக இருந்தபோது நிரூபித்தவர் அவர். அவரது தெளிந்த சிந்தனைத் திறனையும் ஆளுமையையும் யார் மறந்தாலும் தமிழக மக்கள் மறக்க மாட்டார்கள். எனவே, அவர் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், அப்பதவியிலும் சிறப்புற இயங்கி அப்பதவியின் மேன்மையை மேலும் உயர்த்துவார் என்பதில் ஐயமேயில்லை.

- கா.க. வேலாயுதன், ஒண்டிப்புதூர்.

## பதவிக்கு ஏற்ற பால்கிவாலா

அரசியல் சட்ட நிபுணர், தொழில் நிர்வாகத்தில் அனுபவம் பெற்றவர், வெளிநாட்டில் இந்தியத் தூதராக இருந்து நல்லெண்ணங்களைப் பரப்பியவர், நடுநிலையாளர், தேசியவாதி, மதச்சார்பற்றவர். இத்தனை சிறப்புக்களையும் பெற்ற நானி பால்கிவாலாவையே நான் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பேன். இப்படிப்பட்டவரால் தான் மதம், மொழி, கட்சி, இனம், வகுப்புவாதங்கள் என்று தீய சக்திகள் தலைவிரித்தாடும் தமது நாட்டின் நிலையை நுணுக்கமாக ஆராய்ந்து சமாளித்துத் தீர்வுகாண உதவ முடியும்.



- பி.என்.எஸ். மணி, செகந்திராபாத்.

## வி.ஆர். கிருஷ்ணய்யரே சிறந்த தேர்வு!



உச்சநீதிமன்ற நீதிபதியாகப் பணியாற்றிய போது பல நுணுக்கமான தீர்ப்புகளை வழங்கிச் சட்டத்தின் பல கோணங்களும் மக்களுக்கு விளங்குமாறு செய்தவர். ஏழை, நடுத்தர மக்களுக்காகப் பாடு பட்டுக் கொண்டிருப்பவர். பொறுப் புணர்வுடனும் நிதானத்துடனும் பிரச்னைகளை ஆராய்ந்து தீர்வுகாணக் கூடியவர். ஜாதி, மத, இன உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட தேசிய விடுதலைப் போராட்ட வீரர். இப்படிப்பட்ட வி.ஆர். கிருஷ்ணய்யர் ஜனாதிபதியாக நியமிக்கப் பட்டால் நிச்சயம் அதைத் திறமையுடனும், நடுநிலையுடனும் நிர்வகிப்பார் என்பதால் அவருக்கே என் வோட்டு.

- எஸ்.பி. பாலசுப்பிரமணியன், பாப்பான் குளம்.

## ஆளுங்கட்சிக்கு செக் வேண்டும்!

நான் அடல் பிஹாரி வாஜ்பாயைத் தான் தேர்ந்தெடுப்பேன்! அவர் வெளியுறவுத் துறை அமைச்சராக இருந்த போது ரஷ்யா பக்கம் சாய்ந்திருந்த நமது "அணிசேராக்" கொள்கையை நேராக நிறுத்தி, அமெரிக்காவையும் நம் பக்கம் நெருங்கி வரச் செய்தவர். சொல்லாற்றல் மிக்க வாஜ்பாய், தமது நகைச்சுவையுணர்வுடன் கூடிய பேச்சால் எதிராளி கூட தவறை உணரும்படி செய்ய வல்லவர். பொது வாழ்வில் ஒரு சிறுகறையும் படியாமல் தமது தூய்மையைக் காத்து வருபவர். எளிதில் உணர்ச்சிவசப்படாதவர்.



எல்லாவற்றுக்கும் மேலாக எதிர்க் கட்சியைச் சேர்ந்த ஒருவர் ஜனாதிபதியாக இருந்தால் - ஆளுங்கட்சி நிச்சயமாகத் தவறுகள் செய்யவே முடியாது என்பதால் நான் வாஜ்பாயைத்தான் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுப்பேன்!

- எம்.ஆர். பிரபு ஆனந்த், சாத்தூர்.

# கல்கி

# பொன் விழா மலர்





**புதுமைப் பொலிவும் பழைமை எழிலும் கலந்த பொக்கிஷம்!**

**ஆகஸ்டு 1உ பொன் விழா மேடையில் வெளியிடப்படுகிறது**

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளவும். அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதவும்.

விலை ரூ 50/- ரிஜிஸ்தர் தபால் செலவு ரூ. 8/-

தாமதமின்றிச் செயல்பட்டால் ஏமாற்றத்தைத் தவிர்க்கலாம்.

மானேஜர், கல்கி, கிண்டி, சென்னை - 600 032



# மகாபுருஷரின் மைந்தர்

காமராஜ் நினைவு அரங்கத்தில் போய், மறைந்த கே. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களின் நூற்றாண்டு விழாக் கொண்டாட்டத்தை வைத்திருக்கிறார்களே, பிரம்மாண்டமான அந்த இடத்தில் அத்தனை கூட்டம் வருமா என்று நினைத்துக் கொண்டே போனோம். கிட்டத்தட்ட ஹால் நிறைந்திருந்தது.

''இத்தனை கூட்டத்தைப் பார்க்க எனக்குச் சந்தோஷமாய் இருக்கிறது. தமிழர்கள் நன்றி மறப்பவர்கள் அல்லர் என்று நினைக்க மகிழ்ச்சியாய் இருக்கிறது'' என்றார் ம. பொ. சி. ''எனக்கும் பாலசுப்பிரமணிய அய்யருக்கும் ஒரு விசித்திரமான தொடர்பு உண்டு. பல்கலைக் கழக ஆட்சிக் குழுவிலிருந்து அவர் வெளியே வந்தபோது, நான் அங்கே போனேன். மேல் சபைப் பதவிக் காலம் முடிந்து அவர் அங்கிருந்து வந்தவுடன், நான் மேல் சபைக்குப் போனேன்!''

பாலசுப்பிரமணிய அய்யரைப் பற்றிப் பேசத் தமக்கு ஐந்து நிமிடங்களே ஒதுக்கியிருப்பது குறித்து வருத்தப்பட்டுக் கொண்டார் ம.பொ.சி. ''நிமிஷக் கணக்கெல்லாம் நமக்குச் சரிப்பட்டு வராது. மணிக்கணக்கில் பேசினால்தான் பேசிய மாதிரி இருக்கும்!'' என்று கூறிய போது, மேடையிலிருந்த ஜனாதிபதி ஆர். வி. உட்பட, எல்லாருமே குலுங்கக் குலுங்கச் சிரித்து விட்டனர்.

ஒருமுறை காஞ்சி பரமாச்சாரியாரைப் பார்க்கப் போனார் பாலசுப்பிரமணிய அய்யர். பரமாச்சாரியார் புன்சிரிப்புடன் வேடிக்கையாகக் கேட்டாராம் : ''நீ பெரியவனா? உன் தகப்பனார் பெரியவரா?''

பத்தொன்பது வயதிலேயே தகப்பனாரை இழந்து, குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பாலசுப்பிரமணிய அய்யர் அடக்கத்துடன், 'தகப்பனார்தான்!' என்றார். 'மகாபுருஷர்' என்று மகாத்மா காந்தியே போற்றிய தன் தகப்பனார் வி. கிருஷ்ணசாமி அய்யர், நிச்சயம் தம்மை விடப் பெரியவர்தான் என்றார் பாலசுப்பிரமணிய அய்யர்.

காஞ்சிப் பெரியவர் சொன்னாராம் : ''கிருஷ்ணசாமி அய்யர் உருவாக்கிய சமஸ்கிருதக் கல்லூரி, வேங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரி மற்றும் வைத்தியசாலை, இந்தியன் வங்கி ஆகியவற்றைத் தொடர்ந்து அதே சிறப்போடு, மகனாகிய நீ நடத்தி வருகிறாயே, அதுவும் பெரிய விஷயம் தான். க்ஷேமமாய் இரு!''

நல்ல காரியங்களை ஆரம்பித்து வைப்பது எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்குக் கட்டிக் காப்பதும் முக்கியம் என்று உணர்த்திய இந்தச் சம்பாஷணையை நினைவுகூர்ந்து சொன்னார் நீதிபதி எம். எம். இஸ்மாயில்.

தமது பழைய நண்பரைப் பற்றிச் சற்று உணர்ச்சியோடு பேசினார் ஆர். வி.

''எம். எல். சி. யாக அவர் இருந்த போது, மேலவைக் குறிப்புக்களை ஆழ்ந்து படிப்பார் பாலசுப்பிரமணிய அய்யர். ஒரு முறை, தமிழ்நாட்டைப் பொறுத்தவரை உரங்கள் அத்தனை விற்கவில்லை; இந்த

வருடம் குறைவாகத்தான் விற்பனை ஆகி இருக்கிறது என்று சொல்லியிருந்தேன். அடுத்த வருடமே உரத்துக்கு டிமாண்ட் அதிகமாகி, உரங்கள் பற்றாக்குறை ஏற்படும் அளவுக்குப் போய் விட்டது. அப்போது மேலவையில் நான் இதைத் தெரிவித்த போது, 'சிக்'கெனப் பிடித்துக் கொண்டார் பாலசுப்பிரமணிய அய்யர். 'போன வருடம் என்னடா என்றால் அப்படிச் சொன்னீர்கள். இந்த வருடம் ஒரேயடியாக மாற்றிச் சொல்கிறீர்களே?' என்று பிடித்தார். 'விவசாயிகளிடமிருந்து விளைபொருள்கள் வாங்கும் விலையைக் கூட்டி விட்டோம் இந்த வருடம். அதனால் உரங்களை அதிகம் உபயோகிக்கத் தொடங்கியிருக்கிறார்கள் அவர்கள். எனவே உரப் பற்றாக்குறை ஏற்பட்டது' என விளக்க வேண்டி வந்தது. மேலவைக் குறிப்புக்களை ஒரு மாணவனைப் போல் தீவிரமாகப் படித்துக் குறித்து வைத்துக் கொள்ளுவார். சமயத்தில் நாசுக்காக எடுத்துக் காட்டுவார்.

''பத்துப் பேரே வந்தால் கூட, கோகலே ஹாலில் தொடர்ந்து கீதைச் சொற்பொழிவுகள் நடத்தியவர், பாலசுப்பிரமணிய அய்யர். பதினெட்டு அத்தியாயங்களையும் முடித்தார்; அங்க ஆட்கள் கேட்க வருவதில்லையே என்று பாதியில் நிறுத்தி விடவில்லை.

''தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் என்று மும்மொழிகளில் வல்லவர். அவர் மகாகனம் சீனிவாச சாஸ்திரியாரைச் சந்திக்கும் போது அநேகமாக நானும் அங்கே போவதுண்டு. சுவாரசியமான அந்தச் சந்திப்புக்களால் இளைஞனாயிருந்த நான் பயன் அடைந்ததுண்டு. அம் மாதிரி நாட்கள் இக்கால இளைஞர்களுக்கு வாய்க்கவில்லையே என்பதுதான் என் வருத்தம்'' என்றார் ஆர். வி.

உண்மைதான், பாலசுப்பிரமணிய அய்யரைப் போன்ற அறிவாற்றலும் அடக்கமும் எளிமையான வாழ்க்கையும் உடைய பெரியோர்களை இன்று காண்பதே அரிதாகி வருகிறது. எனவே இன்றைய இளைஞர்களின் பொறுப்பும் அதிகமாகிறது. கடந்த கால உத்தமர்களை நினைவுகூர்வதுடன் இன்றைக்குள்ள மெய்யான பெரியோர்களையும் தேடிப் பிடித்து இளைஞர்கள் நாடிச் செல்ல வேண்டும்; அவர்களுடைய செயல்பாட்டினைக் கவனித்துக் கற்றுக் கொள்ள வேண்டும். இதன் மூலம்தான் அப்படிப்பட்ட பெரியோர்கள் நாளுக்கு நாள் குறைந்து வருவதையும் தடுக்க முடியும்.

– நம்பி

---

# படப்பிடிப்புக்கு ஹெலிகாப்டர்!

**டைரக்டர் ஸ்ரீதர்**



எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. 'அனந்தசாமி ஐயங்காரின் கட்டுப்பாட்டை மீறி, ஹேமமாலினியை என் படத்தில் நடிக்க வைக்க முடியுமா?' சட்டரீதியான இந்த அம்சத்தை ஒரு வழக்கறிஞரைக் கலந்து ஆலோசிக்கத் தீர்மானித்து வி. பி. ராமனை அணுகினேன்.

''சட்டப்படி எந்த ஒரு கலைஞரையும் இப்படி கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க முடியாது'' என்ற வி. பி. ராமன், ''கேஸ் போட்டால் ஜெயித்து விடலாம்'' என்றும் உறுதியாகக் கூறினார். எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்துக்கு அளவே இல்லை. அந்தக் கணமே ஷூட்டிங்கில் கலந்து கொண்டு ஹேமமாலினி சிவாஜியுடன் டூயட் காட்சியில் நடித்த கையோடு, ராஜேந்திர குமாருடனும் ஹிந்தி டூயட் காட்சியில் நடிப்பது போலக் கற்பனை செய்து பார்த்தேன்.

ஹேமமாலினிக்கும் அவர் தாயாருக்கும் விவரம் தெரிவித்தேன். ஹேமமாலினியைக் கட்டுப்பாட்டிலிருந்து விடுவிப்பதில் நான் காட்டுகிற ஆர்வத்துக்கு அவர் தாயார் நன்றி தெரிவித்தார். இதன் பிறகு நாங்கள் மூவருமாகச் சேர்ந்து ஒருமுறை வி. பி. ராமனைச் சந்தித்துப் பேசினோம். கேஸ் தயாரிக்கச் சில நாட்கள் அவகாசம் கேட்டார் ராமன். குறிப்பிட்ட நாளில் திரும்பவும் வரச் சொன்னார்.

இவ்வளவு நடந்த பிறகு ஹேமமாலினியும் அவர் தாயாரும் பின்வாங்கி விட்டார்கள்! ''கோர்ட்டுக்கெல்லாம் போக வேண்டாம் ஸார்'' என்று ஜெயா சக்கரவர்த்தி கூறிய போது, எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

''ஏன், ஏன்?'' என்று திகைப்புடன் கேட்டேன்.

''என் பெண் இப்போது புகழ் ஏணியின் உச்சியில் இருக்கிறாள். இந்தச் சூழ்நிலையில் கோர்ட், கேஸ் என்று போனால் புதிதாக ஏதாவது சிக்கல்கள் தோன்றலாம். தீர்ப்பு வழங்கப்படும் வரை புதுப்படங்கள் ஏதும் ஒப்புக் கொள்ளக் கூடாது என்று தடை உத்தரவு பிறப்பிக்கப்படலாம். இதுவே ஹேமமாலினியின் சினிமா வாழ்க்கையில் ஒரு தேக்க நிலையைக் கூட உருவாக்கி விடக் கூடும். மறுபடி மார்க்கெட்டைப் பிடிப்பது அசாத்தியமாகி விடலாம்....''

இப்படி ஜெயா சக்கரவர்த்தி கூறி வர, 'சரிதான், இவரை நண்பர்கள் சிலர் சேர்ந்து கொண்டு பயமுறுத்தியிருக்கிறார்கள்' என்று எனக்குப் புரிந்து விட்டது.

''வாங்க, மறுபடியும் வக்கீலைச் சந்தித்துப் பேசுவோம். உங்க சந்தேகங்களையெல்லாம் கேட்டுத் தீர்த்துக் கொள்ளலாம்'' என்றேன்.

என் பேச்சு எடுபடவில்லை. ஜெயா சக்கரவர்த்தி ஒரே பிடிவாதமாக இருந்து விட்டார். ''இன்னும் இரண்டு வருஷங்களுக்குள் ஒப்பந்தம் காலாவதியாகி விடும்; அப்புறம் ஹேமா தன் விருப்பப்படி எந்தப் படத்தில் வேணுமானாலும் நடிக்கலாம். இப்ப கேஸ் போட்டு வீண் வம்பை விலைக்கு வாங்குவானேன்? சாரி, எங்களை விட்டுடுங்க'' என்றார்.

ஹேமமாலினி இல்லை என்றாகி விட்டதில் எனக்கு ஏமாற்றம்தான் என்றாலும் அதையே நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்க முடியுமா? அடுத்து, 'வேறு யார் ஹீரோயின்?' என்று யோசித்தேன். யாரை ஹீரோயினாகப் போட்டால் தமிழ், ஹிந்தி ஆகிய இருமொழிப் படங்களுக்கும் பொருத்தமாக இருக்கும்? அத்தனை பேரையும் பட்டியல் போட்டுப் பார்த்தேன். யாரும் தேறவில்லை. ஒரே நடிகையை இருமொழிப் படங்களிலும் நடிக்க வைப்பது

சாத்தியமில்லை என்ற முடிவுக்கு வந்தேன். எனவே, தமிழில் சிவாஜி - காஞ்சனா ஜோடி என்றும், ஹிந்திக்கு ராஜேந்திரகுமார் - வஹிதா ரஹ்மான் ஜோடி என்றும் தீர்மானித்தேன்.

சரி, இசையமைப்பாளர் யார்? இதற்கு முன் பாலும் பழமும் படத்தின் ஹிந்தி வடிவமான சாத்திக்கு இசையமைத்தவர் நௌஷாத். அப்போது அவருக்குப் பாலும் பழமும் பாடல்களைப் போட்டுக் காட்டினேன். கேட்டு விட்டு நௌஷாத் என்ன சொன்னார் தெரியுமா? ''எம். எஸ். விஸ்வநாதன் ஒரு ஜீனியஸ்! இந்த அளவுக்கு ஹிந்தி படத்துக்கு என்னால் இசையமைக்க முடியுமா என்பது சந்தேகம்தான்!''

இந்தச் சம்பவத்தை நான் சென்னை திரும்பிய பிறகு எம். எஸ். வி. யிடம் கூறினேன். அப்போது அவர், உணர்ச்சிபொங்க, ''ஸ்ரீதர்! நௌஷாத்தை நான் என்னுடைய மானசீக குருவாக ஏற்றவன். அப்படிப்பட்டவர் எனக்கு இப்படி ஒரு பாராட்டு வழங்குவதென்றால், இதைவிடப் பெரிய பாக்கியம் எனக்கு வேறு என்ன இருக்கிறது?'' என்று பூரிப்படைந்தார். அவர் மெய்சிலிர்ப்பதை என்னால் காண முடிந்தது.

இவையெல்லாம் மிகைப்படுத்தப் படாத சத்தியமான வார்த்தைகள். உணர்ச்சிகளின் சங்கமத்தில் எழுந்த சொற்கள். இந்நாட்களில் இப்படிப்பட்ட பரந்த மனப்பான்மையுடன் கூடிய இதயபூர்வமான சொற்களைக் கேட்பதே அரிதாகி விட்டது.

இது ஒருபுறமிருக்க, 'அன்று சிந்திய ரத்தம்' தமிழ்ப் படத்துக்கு எம். எஸ். விதான் இசை அமைப்பாளர் என்று தீர்மானித்து விட்டேன். ஆனால் அதன் ஹிந்தி வடிவத்துக்கு நௌஷாத்தை நான் மறுபடி அணுகவில்லை. அதற்குக் காரணம் உண்டு. இந்தப் படம் பற்றிச் சிந்திக்கத் தொடங்காத நிலையில் நான் ஒரு சமயம் பம்பாய் சென்றிருந்த போது, ஜெய்கிஷன் என்னை வந்து சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார். உரையாடலினிடையே, ''அடுத்த படம் என்ன? யார் மியூஸிக்?'' என்று கேட்டார்.

''படம் என்ன, ஹிந்தியா, தமிழா என்றெல்லாம் இன்னும் முடிவாகவில்லை; ஆனால் என்னுடைய அடுத்த ஹிந்தி படத்துக்கு நீங்கள்தான் மியூசிக்'' என்றேன்.

ஜெய்கிஷனுக்கு ஆச்சர்யமாகப் போய் விட்டது. ''சும்மா தெரிந்து கொள்ளும் ஆர்வத்தில்தான் கேட்டேன்; வாய்ப்புக் கோரும் நோக்கில் அல்ல'' என்றார்.

''அது எனக்குப் புரிகிறது. ஆனாலும் நான் தீர்மானித்து விட்டேன்'' என்றேன்.

இந்த உரையாடலின் விளைவுதான் அன்று சிந்திய ரத்தம் ஹிந்தி வடிவத்துக்கு நான் சங்கர்ஜெய்கிஷனைத் தேர்ந்தெடுத்தது.

அடுத்தபடி கேமிராமேன். காதலிக்க நேரமில்லை, வெண்ணிற ஆடை படங்களுக்கு என்னுடன் பணிபுரிந்த பாலகிருஷ்ணா இப்போது சாந்தாராமுடன் ரொம்ப பிஸியாகி விட்டார். ஹிந்திக்கு எனக்குக் கிடைத்தவர் கபாடியா. பெரிய பெரிய செட்களில் ஷூட் பண்ண வேண்டும்; லைட்டிங் அருமையாக அமைய வேண்டும்; வேகமாகவும் வேலை செய்ய வேண்டும். என்னுடைய இந்த எல்லா விருப்பங்களையும் பூர்த்தி செய்தவர் கபாடியா. காட்சியை விளக்கிய பதினைந்து நிமிஷங்களுக்குள் அற்புதமாக லைட்டிங் அமைத்து விடுவார். இதன் தமிழ் மொழிப் படத்திற்கு இன்னொரு பாலகிருஷ்ணன் பணியாற்றினார். ஆமாம். இப்போது விக படங்களுக்கு ஒளிப்பதிவு செய்கிறாரே, அவரேதான் இவர்.

பிரும்மாண்டமான செட்கள் போட்டுப் படப்பிடிப்பு செய்ய உத்தேசித்திருந்ததால் எனக்கு ஆர்ட் டைரக்டர் சாந்தி தாஸ் நினைவு வந்தது. பம்பாயில் சில படங்களுக்கு இவர் பிரமாத செட்கள் அமைத்து நான் பார்த்திருந்தேன். அவரைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தேன். இதனால் இதுநாள் வரை என்னுடன் ஆர்ட் டைரக்டராக ஒத்துழைத்த கங்காவுக்கு என் மேல் சற்று வருத்தம் ஏற்படத்தான் செய்தது. ஆனாலும் நான் அவரைச் சமாதானப்படுத்தி விட்டேன். அண்மையில் மறைந்து போன கங்காவும் நானும், அவரது இறுதி மூச்சுவரை நெருங்கிய நண்பர்களாகவே இருந்தோம்.

'அன்று சிந்திய ரத்தம்' படத்துக்குப் பெரிய செட்டுகள் போடுவது தவிர, நேரடி லொகேஷனுக்காக ஐரோப்பா செல்ல வேண்டும் என்றும் தீர்மானித்து, அதற்கான ஏற்பாடுகளையும் கூடவே செய்து கொண்டிருந்தேன். படம் முன்னேறிக் கொண்டிருந்தது. ஒரு கட்டத்தில் கதைப்படி ஒரு காட்சிக்கு ஹெலிகாப்டரும், இந்த ஹெலிகாப்டரோடு காட்சியைப் படம்பிடிக்க மற்றொரு ஹெலிகாப்டரும் ஆக, இரண்டு ஹெலிகாப்டர்கள் தேவைப்பட்டன. அவற்றுக்கான வாடகை தவிர, பம்பாயிலிருந்து அவை தமிழகம் வந்து போக ஆகும் செலவு பற்றித் தெரிய வந்த போது, ஹெலிகாப்டர் ரோடார்களை விட வேகமாக என் தலை சுழல ஆரம்பித்தது!

படம் உதவி : ஆனந்தன்

# கல்வி பெறத் துடிக்கிறார்கள்! கருணை காட்டுங்கள்!

●● என் தந்தை 28 ரூபாய் கூலிக்கும் என் தாய் 10 ரூபாய் கூலிக்கும் தினமும் வேலைக்குச் சென்று குடும்பத்தைக் காப்பாற்றுவதுடன் என்னை மிகவும் கஷ்டப்பட்டுப் படிக்க வைக்கிறார்கள். இந்த ஆண்டு எனக்கு இறுதிப் படிப்பு. பிராஜெக்ட் செய்ய வேண்டியிருக்கிறது. அதனால் நீங்கள் அவசியம் உதவுவீர்கள் என்று நம்புகிறேன்.

- வி. கமலவேணி, கோவை.



எஸ். வீரலக்ஷ்மி

●● என் தகப்பனார் இ. ரே. மேல்நிலைப் பள்ளியிலிருந்து ஓய்வு பெற்ற தலைமை எழுத்தர். ஓய்வு ஊதியம் ரூ 585/- தவிர வேறு எந்த வருமானமும் இல்லை. நான் கல்வியைத் தொடர எனக்கு நிதி உதவி அளிக்குமாறு வேண்டுகிறேன்.

- கே. ஸ்ரீநிவாசன், திருச்சி.

●● சென்ற ஏப்ரல் மாதம் எனது தகப்பனார் அகால மரணமடைந்து விட்டார். குடும்பத்துக்கு வேறு எந்தவித வருமானமோ சொத்தோ இல்லாத காரணத்தில் நான் படிப்புக்காக பிறர் உதவியைத்தான் நாடி நிற்க வேண்டியுள்ளது. தங்கள் அறக்கட்டளையின் பள்ளி மாணவர்களுக்கான உதவித் தொகையைப் பெற இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறேன்.

- எஸ். வீரலக்ஷ்மி,
குலசேகரன்பட்டினம்.

இந்த மாதிரி உருக்கமான கடிதங்களுடன் விண்ணப்பங்கள் ஆயிரக் கணக்கில் ஆண்டுதோறும் குவிகின்றன. கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை முதல் ஆண்டில் ரூ 10,000/- உதவித் தொகை வழங்கியது. படிப்படியாக உயர்ந்து இன்று ரூ 35,000/- அளிக்கிறது. (விவரங்கள் 28.6.92 கல்கி இதழ்.) அதுவும் போதவில்லை. அத்தனை விண்ணப்பங்கள்! பள்ளி அல்லது கல்லூரி முதல்வரின் சான்றிதழ் தேவை என்பதால் ஏமாற்று வேலைக்கு இடமில்லை. அறங்காவலர்கள் கூடி விவாதித்து உதவித் தொகை பெற ஒவ்வொரு மாணவரையும் கருத்துடன் தேர்ந்தெடுக்கிறார்கள். வாழ்க்கையுடன் போராடி வெற்றி பெறத் துடிக்கும் இத்தகைய மாணவர்களுக்கு உதவ



கே. ஸ்ரீநிவாசன்

வேண்டும் என்ற ஆர்வம் உங்கள் உள்ளத்தில் எழுமானால் உங்களால் இயன்ற அளவு நன்கொடையை கல்கி நினைவு அறக்கட்டளைக்கு அனுப்பலாம். பொருளா



வி. கமலவேணி

தாரத்தில் பின்தங்கி ஆனால் படிப்பில் சிறந்து விளங்கும் மாணவ மாணவியருக்கு உதவ உங்கள் நன்கொடை கை கொடுக்கும்.

நன்கொடைகளை டிராஃப்ட் அல்லது எம். ஓ. அல்லது காசோலை மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு மட்டுமே அனுப்ப வேண்டும். நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு. விலாசம் :

கி. ராஜேந்திரன்,
(ஆசிரியர் கல்கி)
நிர்வாக அறங்காவலர்,
கல்கி கிருஷ்ணமூர்த்தி
அறக்கட்டளை,
நெ 1, ஐந்தாவது தெரு,
ஏரி வட்டம்,
நுங்கம்பாக்கம்,
சென்னை - 600 034

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி, ஜூலை 1, 1942

### பார்வதி குமாரமங்கலம்

குடும்பத்தோடு தேச சேவையில் ஈடுபடுவது, தியாகம் செய்வது, சிறை புகுவது முதலியன எல்லாம் வட நாட்டுக்குத்தான் உரியது என்று நாம் நினைத்திருந்த காலம் உண்டு. அதைப் பொய்யாக்கியவர்கள் டாக்டர் சுப்பராயன் குடும்பத்தார். சென்ற சத்தியாக்கிரஹ இயக்கத்தில் ஈடுபட்டு டாக்டர் சுப்பராயனும், அவருடைய மனைவியாரும் சிறை வாசம் செய்தார்கள். அவர்களுடைய குமாரன் ஸ்ரீ மோஹன் குமாரமங்கலம் பொது உடைமைச் சதியாலோசனை வழக்கில் நாலு வருஷம் சிறைத் தண்டனை பெற்று, சமீபத்தில் விடுதலை செய்யப்பட்டார்.




இவர்கள் மூவரும் சிறையில் இருந்த காலத்தில் இங்கிலாந்தில் 'பிரிட்ஸ்கிரிக்'கின் கீழ் ஸ்ரீமதி பார்வதி குமாரமங்கலம் இருந்தார். அவர் இந்தியா திரும்பி வந்ததிலிருந்து, யுவர் இயக்கத்திலும் மாணவர் இயக்கத்திலும் ஈடுபட்டு அரிய ஊழியம் செய்து வருகிறார். தமிழ் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்து, பாஸிஸ்ட் எதிர்ப்பு முன்னணியை அமைத்து வருகிறார். இவருடைய முயற்சியினால் சேலத்தில் ஜூலை மீ 4உ, 5உ களில் தென்னிந்திய மாணவர் மகாநாடு நடைபெறுகிறது.

– அட்டைப்பட விளக்கம்

## புல்லா ரெட்டிக்குப் பாராட்டு

ஐ. ஸி. எஸ். காரர் ஒருவரைப் பாராட்டி எழுதும்படியான சந்தர்ப்பம் நமக்கு வெகு அபூர்வமாகத்தான் கிடைக்கிறது. ஒரு ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர் ஜனங்களின் கட்சியில் நின்று ஜனங்களுக்காகப் போராடுவதென்பதும் அபூர்வமான காரியந்தான். சென்னைக் கார்ப்பரேஷன் கமிஷனர் ஸ்ரீ புல்லாரெட்டி அத்தகைய அபூர்வ ஐ. ஸி. எஸ். காரராயிருக்கிறார். சென்னை நகரில் செய்யப்பட வேண்டிய ஏ. ஆர். பி. வேலைகளின் செலவுகளையெல்லாம் நகரவாசிகளின் தலையில் சுமத்தக்கூடாதென்றும், அந்தச் செலவுகளை கவர்ன்மெண்டே பொறுத்துக் கொள்ள வேண்டுமென்றும் அவர் வாதாடியிருக்கிறார். ஊழலுக்குப் பேர் போன சென்னை நகர சபை நிர்வாகத்தைச் சீர்திருத்தவும், லஞ்சப் பேயை ஒழிக்கவும் ஸ்ரீ புல்லா ரெட்டி எடுத்துள்ள முயற்சி பாராட்டற்குரியது. இத்தனைக்கும் மேலாக, சமீபத்தில் சென்னை நகரத்தை எல்லா கவர்ன்மெண்டு ஆபீஸ்களும் கை விட்டுச் சென்ற போது, கார்ப்பரேஷன் ஆபீஸையும் ஸ்ரீ புல்லா ரெட்டியார் தூக்கிக் கொண்டு கிளம்பாமல் பிடிவாதமாக நகரிலேயே தங்கியிருந்தது மிகவும் விசேஷமாகும்.



## பாலைவன யுத்தம்

லிபியாவில் ஜெர்மன் வெற்றிக்குக் காரணமாயிருந்த இயந்திர பூதம் இதுதான். இந்த டாங்கிகள் பேரிரைச்சலுடன் வெளியில் நெருப்பைக் கக்கிக் கொண்டு சென்றாலும் உட்புறம் மட்டும் 'குளுகுளு'வென்று குளிர்ச்சியாக இருக்கும்படி 'ஏர்கண்டிஷன்ட்'டாகச் செய்யப்பட்டிருந்ததாம்.



## பெயர் மதுரம்; பேச்சோ...!

பெயர்தான் மதுரமே தவிர, பேச்சு என்னமோ வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுந் தான். அப்படிப்பட்ட வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமான பேச்சுக்குப் பதில் சொல்ல முடியாமல் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் திணறும் போது, ஸினிமா பார்ப்பவர்களுக்கு அளவிலாத குதூகலம் உண்டாவது வழக்கம். ''ஆராய்ச்சி மணி'' படத்தில் அத்தகைய குதூகலமான கட்டங்கள் உண்டா என்பது படத்தைப் பார்க்கும் போதுதான் தெரியவரும். ஆனால், மேலே



உள்ள படத்தில் ஸ்ரீமதி டி. ஏ. மதுரம் அவ்வளவு ஆச்சரியம் ததும்பிய கண்களுடன் நோக்குவதைப் பார்த்த பிறகு, ''ஆராய்ச்சி மணி''யில் மேற்படி ஹாஸ்ய தம்பதிகள் வெகு ஆச்சரியமாக நடித்திருப்பதைக் கண்டோமானால், ''என்ன ஆச்சரியம்?'' என்று நாம் ஆச்சரியப்பட மாட்டோம்.

## கிரயமல்ல!

தூத்துக்குடியில் யுத்த பீதியின் காரணமாக, கோவில்பட்டிக்கு ஏராளமான பேர்கள் குடிபுக வந்தனர். இதனால் வீட்டு வாடகையும் உயர்ந்தது.



தூத்துக்குடி வாசி : ஸார்! இந்த வீடு மிகவும் வசதியாய்த்தானிருக்கிறது. வாடகை என்னவோ?

கோவில்பட்டி முதலாளி : குறைச்சல்தான். ரூபாய் நாற்பது. உங்களுக்காக ரூபாய் முப்பத்தைந்துக்குத் தருகிறேன்.

தூ. வாசி : நான் வீட்டின் கிரயத்தைக் கேட்கவில்லை. வாடகையைக் கேட்கிறேன்.

- ஏ. கதிரேசன்
(காலக்ஷேபம்)

## தீயவையாவினும்...

கைகேசி வரங்களைக் கொள்ள ரொம்ப ஆத்திரப்பட்டாள். அந்த ஆத்திரத்துக்கு மேல் ஆத்திரம் தசரதனுக்கு உண்டாகி விட்டது, வரங்களை அவளுக்குக் கொடுத்து விட வேண்டுமென்று. இதை நன்றாய்த் தெரிந்து கொண்டாள் கைகேசி. தைரியம் நன்றாய் வந்து விட்டது அவளுக்கு. வாய் விட்டுச் சொல்லுகிறாள் :

ஏயவ ரங்கள்இ ரண் டின்
ஒன்றினால், என்
சேய் அ ரசாள்வது, சீ தை
கேள்வன் ஒன் றால்
போய்வனம் ஆள்வ(து), எ னப் பு -
கன்றுநின் றா ள்
தீயவை யாவையி னும் சி-
றந்த தீ யாள்.

(ஏயவரங்கள் : எனக்குக் கிடைத்த வரங்கள்; என் சேய் அரசாள்வது : என் மகன் பரதன் அரசாள வேண்டும் ; சீதை கேள்வன் : சீதைக்கு நாயகன் (ராமன் என்று சொல்ல நாஎழவில்லை கைகேசிக்கு); ஒன்றால் : மற்றையதொரு வரத்தால்; போய்வனம் ஆள்வது; நாட்டை விட்டுப் போய் வனத்தில் வசிக்க வேண்டும்; எனப் புகன்று நின்றாள்: என்று துணிச்சலாய்ச் சொல்லி நின்றாள்)

ஷேக்ஸ்பியர் ஓரிடத்தில் சொல்கிறார் : Conscience makes cowards of us all அதாவது 'இதயம் நம்மைக் கோழைகளாய்ச் செய்து விடுகிறது' என்று. ஒரு விஷயத்தில் நமக்கு எவ்வளவோ உறுதியிருக்கலாம். செய்து



தீர்க்க வேண்டுமென்ற ஆத்திரம் இருக்கலாம். ஆனாலும் தாக்ஷிண்யம் என்பது ஒன்று வந்து நம் உறுதியைக் கலைத்து விடும்; ஏன், நம் உள்ளத்தோடு உடலையே நிலைகுலையச் செய்து விடும்.

ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி சொல்லக் கைகேசி தயாராய் இருந்தாள். ஆனாலும் தசரதன் முன்னிலையில் அதைச் சொல்லுவது எவ்வளவோ கஷ்டமாய்ப் போய்விட்டது. ''சீதை கேள்வன்'' என்று வட்டம் சுற்றித்தான் சொல்ல வேண்டியிருந்தது. சொன்ன பிறகு அவள் மூர்ச்சித்துக் கீழே விழுந்து விடும் நிலைமை கூட வந்தது. என்றாலும் மனசையும் உடலையும் திடப்படுத்திக் கொண்டு ''நின்று'' விட்டாள் என்கிற பாவம் அற்புதமாய் வந்திருக்கிறது. அப்பேர்ப்பட்டவளின் உள்ளத்தை அச்சமயம் உற்றுநோக்குவோமானால் அவளைப் பற்றி என்ன சொல்லத் தோன்றும்?

'தீயவை யாவையி னும்
சிறந்ததீ யாள்'

என்றுதான் சொல்லத் தோன்றும்.

- கம்பர் தரும் காட்சி - டி.கே.சி.



☛ "சட்டத்தை மீறவில்லை!"

● பிரபா லிங்கேஷ், மேலகிருஷ்ணன்புதூர்.

? கொத்தடிமை அரசியல் நம் நாட்டில் எப்போது ஒழியும்?

! பச்சை குத்திக் கொள்வதை ஓராண்டுச் சாதனை மலர்களில் நாளிதழ்கள் படம் போட்டு எழுதிப் பெருமையுறும் போது, கொத்தடிமையாவது ஒழியறதாவது! ஊஹூம்!

● ஏ. செந்தில்குமார், கூலூர்.

? இந்திய விண்வெளி ஆராய்ச்சியில் முன்னேற்றம் தெரிகிறதே!

! ராக்கெட்டுகள் ஏவுகணைகளாகவும் பயன்படும் என்பதால் இது, விண்வெளிச் சாதனை, பாதுகாப்பு முயற்சி ஆகிய இரண்டு அம்சங்களுக்கும் பயன்படுகிறது. அமெரிக்கா மிரட்டுவதற்குக் காரணமும் ஏவுகணை டெக்னாலஜியில் நாம் ரொம்ப முன்னேறி விடுவோம் என்பதுதான். ஒரு பக்கம் இந்த டெக்னாலஜி வளர்வது அவசியம் என்றாலும் ஏவுகணைகளைப் பயன்படுத்த அவசியமில்லாமலே போகட்டும்!



☛ விலகி நிற்க காரணம்...

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'டான்சி நிலம் வாங்கியது உண்மை; ஆனால் சட்டத்தை மீறவில்லை' என்ற ஜெயலலிதாவின் அறிக்கை பற்றி?

! 'எஸ். டி. எஸ். முழுசாகப் பதில் சொல்லி விட்டார்' என்றார் ஜெ. ஆனால் சமீபத்தில் மதுரை செய்தியாளரிடம் கூட இந்தக் கேள்விக்கு எஸ். டி. எஸ். சரியாகப் பதில் கூறாமல் நழுவியிருக்கிறார்.

● நா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

? 'அ. தி. மு. க. வினர் கத்தியால் குத்தினால் தி. மு. க. காரனும் பதிலுக்குக் கத்தியால் குத்த வேண்டும்' என்று மாஜி அமைச்சர் முத்துராமலிங்கம் கட்டளையிட்டுள்ளாரே!

! பரிணாம வளர்ச்சி அப்படி இருக்கிறது பாருங்கள்! 'கத்தியைத் தீட்டாதே மனிதா, புத்தியைத் தீட்டு' என்றார் அண்ணா. எம். ஜி. ஆர்., 'கத்தி வைத்துக் கொள்ளுங்கள்' என்றார். இப்போது 'குத்துங்கள்' உபதேசம் நடக்கிறது!



☛ கட்டபொம்மனுக்கு சரி!

● கே. மதுரகீதா, கும்பகோணம்.

? ஓம்கார் இசைக் குழு வெளியிட்டுள்ள 'ஜனனம் முதல் மோட்சம் வரை' இசைத் தொகுப்பு கேசட் கேட்டு ரசித்தீரா?

! ரசித்தேன். வருமானம் முழுவதும் ஸ்பாஸ்டிக் சொசைட்டிக்கு நன்கொடையாகப் போகிறது என்ற எண்ணம் ரசனையின் மகிழ்ச்சியை அதிகரிக்கச் செய்தது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? சிவாஜி லேட்டஸ்டாக வைத்துள்ள 'கட்டபொம்மன் மீசை' எப்படி?

! கட்டபொம்மனுக்குச் சரி, சிவாஜிக்கு அல்ல.



## கொத்தடிமை அரசியல் எப்போது ஒழியும்?

☛ "காலம் வரும்..."

● லவ்லி பாலகிருஷ்ணன், மதுரை - 9.

? 'ஜெயலலிதாவைக் கண்டிக்கும் தகுதி கருணாநிதிக்கு இல்லை' என்று நெல்லை ஜெபமணி கூறியுள்ளாரே!

! கருணாநிதியைக் கண்டிக்கும் தகுதி மட்டும் எல்லோருக்கும் உண்டு என்கிறார் போல! அவர் கண்டித்துக் கண்டித்துக் கண்டதுதான் என்ன!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? 'ஜெ' ஆட்சி பற்றி நிருபர் கேள்விக்கு, "நோ ஐடியா" என்று மத்திய அமைச்சர் அருணாசலம் நழுவியிருக்கிறாரே?

! ஆமாம், மனசில் பட்டதைச் சொல்லப் போக, அப்புறம் ஜெ. ரசிகர்கள் காரை அடித்து நொறுக்க... எதற்கு வம்பு!

● மாரி. வெற்றிவேல், பட்டுக்கோட்டை.

? முதல்வருக்கு நீங்கள் விசுவாசியா; எதிரியா?

! இரண்டுமில்லை. உண்மையான நண்பன். அதனால்தான் விபரீதங்களையும் தவறுகளையும் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது.

● எஸ். கே. எம். மோகன், வேலூர் ❑

? மதுரை மாநாடு சாதனை படைக்கும் மாநாடாக விளங்குமா?

! மக்களுடைய வரிப் பணத்தைப் பயன்படுத்தி நாளிதழ்களில் பக்கம் பக்கமாக பல்வேறு அரசுத் துறை விளம்பரங்களைத் தந்து, சாதனை புரிந்து விட்டது போல் பாவலா காட்டும் அநாகரிகத்தில் கின்னஸ் சாதனையையே புரிந்து விட்டது! இந்த அளவுக்கு 'ஜால்ரா' விளம்பரங்கள் இது வரை எந்தத் தமிழக ஆட்சியும் தந்ததில்லை. மற்றபடி தமது அரசின் சாதனை என்று 'ஜெ' நிருபர்களிடம் வர்ணித்திருப்பதெல்லாம் ஒரு சராசரி அரசு செய்ய வேண்டிய கடமைகள்தாமே தவிர, அவற்றுக்கும் மேல் சாதனை என்று கூறத்தக்க அளவில் ஏதுமில்லை.

● மா. பழனிசாமி, கோவை.

? அரசியல்வாதிகளின் எப்படிப்பட்ட நடைமுறை உங்களுக்குச் சுத்தமாகப் பிடிக்கவில்லை?

! ஆளுநரைக் கூட ஆளும் கட்சியில் ஒருவராக்கி, ராஜ்பவன் வாசலில் முதல்வருக்கு 'பானர்' வைப்பது போன்ற யோசனையற்ற ஜால்ரா காட்சிகள்.

● க. கோடி, ஆவடி.

? பெண்கள் படிப்பில் முன்னேறி வருகிறார்களே?

! ஓ! அதான் படிப்பு நாட்களின் நினைவிலேயே பெண் எம். எல். ஏக்கள் யூனிஃபார்ம் பட்டுப் புடவைகள் கேட்டார்களோ!

● ஆர். விஜயராஜ், பெரியகுளம்.

? 'காலம் வரும் வரை காத்திருப்பேன்' என்கிறாரே ஆர். எம். வீ.?

! வேறு வழி? ஆனால் காலம் வருமா என்பதுதான் சந்தேகம்!

● எஸ். செந்தில், கொள்ளிடம்.

? ஜெயலலிதாவை விட்டு மூப்பனார் விலகி இருப்பது ஏன்?

! காங்கிரஸின் த னி க் கௌரவத்தைக் கட்டிக் காக்க நினைப்பதால்.

● த. செல்லபாண்டி, சென்னை.

? இலவச மின்சாரத்தைத் தமிழக அரசு ரத்து செய்ததை எதிர்த்துப் போராட்டம் நடத்திய எதிர்க்கட்சிகளுக்கு வெற்றி தானே?

! நிச்சயம் வெற்றிதான். ஆனால், இலவசம் என்பதாக எதுவும் கிடையாது. இலவச மின்சாரத்தால் மின்வாரியத்துக்கு ஏற்படும் நஷ்டத்தை வரி செலுத்தும் மக்கள் தான் தாங்குகிறார்கள். இதைப் பட்டப்பறிவில்லாத மக்கள் புரிந்து கொள்வதில்லை. அதனால்தான் அரசியல் தலைவர்கள் இலவச சித்து விளையாட்டு நடத்த முடிகிறது. மேலும் இலவசம் என்று ஒன்றை அறிவித்த பிறகு அரசு அதை வாபஸ் பெறுவது எவ்வளவு கஷ்டம் என்பதையும் எதிர்ப்பு உணர்த்தியது. இப்படி எதிர்ப்பு இருக்கும் என்ற தொலைநோக்குப் பார்வை இருந்திருந்தால் நேற்று ரத்து, இன்று வாபஸ் என்று 'ஜெ' அவமானப்பட நேர்ந்திராது. தமிழகமெங்கும் போலீஸின் பயங்கர அடக்குமுறைக்கும் சிறைகள் நிரம்பி வழியவும் அவசியம் இருந்திராது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எஸ். கே. எம். மோகன்,
54, பிள்ளையார் கோயில் தெரு,
கழிஞ்சூர், வேலூர் - 632 006.

☛ "கத்தியால் குத்து!"



☛ "நோ ஐடியா"



# "பழைய ஞாபகம் போகவில்லையா?"

◆ 'ஒரு கொத்தாரி மறைந்தார்: பல கொத்தாரிகள் மலரட்டும்!' தலையங்கம் படித்தேன். ஒவ்வொரு புதிய ஆட்சியாளரையும் நாம் மிகவும் நம்பிக்கையுடன்தான் எதிர்பார்த்து வரவேற்கிறோம். (எத்தனை தடவை கட்டுக் கொண்டாலும் நமக்குச் சுடுவதே இல்லை) அந்த நம்பிக்கைகள் விரைவிலேயே உதிர்ந்து விடுவதும் கண்கூடு. இதில் ஏமாற்றத்திற்கு இடமேது? ஆட்சியின் இரண்டாம் ஆண்டாவது மாட்சிமைமிக்கதாக விளங்க வேண்டும் என எதிர்பார்ப்பதை விட்டு விட்டு, 'மாட்சிமை பொருந்தியதாக ஆக்கிவை இறைவா' என பிரார்த்திப்பதைத் தவிர வேறு கதியில்லை நமக்கு!
அரியநாயகிபுரம்,
ஏ. ஜப்பார் காதர்.

◆ வெறும் அரசியல் பற்றியே தலையங்கம் தீட்டிக் கொண்டிருந்த கல்கி, தொழில் அதிபர் கொத்தாரிக்குத் தலையங்கத்தின் மூலம் புகழஞ்சலி செய்த விதம் பாராட்டிற்குரியது!
அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

◆ 'பரப்பரப்பான பதவிக் காலம்' என்று ஜனாதிபதியின் பதவிக் காலத்தில் நடந்த சம்பவங்களைத் தொகுத்து, அட்டைப் படத்திலும் போட்டு, பிரிவுபசார விழாவைப் போல் அமர்க்களப்படுத்தி விட்டீர்கள்!
மேட்டூர் அணை - 2,
ஆர். கருணாகரன்.

◆ அட்டையில் குடியரசுத் தலைவரின் அட்டகாசமான புகைப்படம்; உள்ளே அவரைப் பற்றிய அற்புதமான கட்டுரை. இரண்டுமே அருமை!
குத்தாலம், குமரேசன்.

◆ ராஜ்யசபைத் தேர்தலில் இ.காங்கிரசுக்கு இட ஒதுக்கீடு பற்றிய கார்ட்டூன் என்னை வயிறு வலிக்கச் சிரிக்க வைத்தது.
போடிநாயக்கனூர்,
ரா. நாச்சிமுத்து.

◆ என்ன இன்னும் பழைய ஞாபகம் போகவில்லையா? முதல் பக்கக் கட்டுரையில் அமைச்சர் கண்ணப்பனைப் பற்றிக் குறிப்பிட்டு விட்டு, முன்னாள் தி.மு.க அமைச்சர் கண்ணப்பனின் படத்தை வெளியிட்டு இருக்கிறீர்களே?
வாடிவூர், சிவ. முரளி.



(வருந்துகிறோம். அ.இ.அ.தி.மு.க. அமைச்சர் கண்ணப்பன் படத்தை இதோ பிரசுரித்திருக்கிறோம். - ஆர்)

◆ இன்று நாட்டில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளை "மாறி பொய்த்த நடா" கவிதையின் மூலம் வெளிப்படுத்திய "ஆர். நிலகவதி"க்குப் பாராட்டுக்கள்.
கோவைபுதூர், ச. சுகவனம்.

◆ "சாலை அமைப்போம்" இன்லண்ட் லெட்டர் சிறுகதை பல பஞ்சாயத்து யூனியன்களிலும் நடைமுறையிலிருக்கும் அவல நிலைமையை யதார்த்தமாகக் கட்டிக்காட்டியது.
சென்னை - 23, கி. ராமநாதன்.

◆ 'பார்' புகழ் 'டான்ஸி ராணி' பதில் துணிச்சல்மிக்கது.
மேல்பட்டி, எஸ். மாறன்.

◆ "சாதிகள் இல்லையடி பாப்பா..." என்ற பாரதியின் வைர வரிகளுக்குப் பட்டை தீட்டியது போல இருந்தது. 'காணிக்கை' சிறுகதை.
ரெட்டியார்பாளையம்,
கோவி. இராமநாதன்.

◆ 'அர்வலம்' சிறுகதை இன்றைய சூழ்நிலையோடு ஒத்துப் போகும் யதார்த்தம். உணர வேண்டியவர்கள் உணர ஆண்டவன்தான் அருள்புரிய வேண்டும்.
குடியாத்தம்,
வி.சி. சுப்ரமணியம்.

◆ டாக்டர் பதில் பகுதியில் சோயா புரதம் பற்றிப் படித்தேன். கழிவாக வெளியேறும் புரதத்தின் ஒரு பகுதி சிறுநீரின் வழியாகவும் வெளியேறுகிறது. எடை குறைவான புரதப் பொருள் விரைவாக வெளியேறி விடுகிறது! எடை அதிகமான புரதப் பொருள் தேங்க ஆரம்பிக்கிறது. மெல்ல ஒன்று சேர்ந்து இறுகி, கடினமான சிறுநீரகக் கற்களாய் உருமாற்றம் அடைகின்றன. இந்த வகையான புரதச்சத்து HDP (High Density Proteins) எனப்படுகின்றன. இதுதான் சோயாவில் இருக்கும் புரதச் சத்து.

சோயா புரதம் கற்களாய் உருமாறுவது முப்பது வயதுக்கு மேல் உள்ளவர்களுக்குத்தான். எனவே முப்பது வயதுக்குக் கீழ் உள்ளவர்கள் சோயா சாப்பிடுவதில் தடை இல்லை. ஆனால் முப்பது வயதைத் தாண்டியவர்கள் அளவோடு சாப்பிடுதல் வேண்டும்.
மதுரை - 20, டாக்டர்
மஞ்சுளா ரவிச்சந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600032. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

அறிமுகப்படுத்துகிறோம்
புதிய ஸெரிலாக்!

எப்போதையும் விட
இப்போது சிறந்தது!!




இப்போது புதிய Z-ஷேன் முறைப்படி ஸெரிலாக் தயாரிக்கப்படுவதால், முன்பைவிட எளிதில் ஜீரணமாகிறது!

New IMPROVED

Nestlé

Cerelac

உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக்.

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப் பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்.

REGISTERED NO. M. 4392